# கல்கி

KALKI 18.6.89 ரூ. 2.








# அக்னி—
# அழிப்பதற்கு ஓர் ஆயுதம்!

இப்போது இந்தியாவில் இப்போது இந்தியாவில் இப்போது இந்தியாவில் இப்போது இந்தியாவில்

# International Lux



## ‘‘உலகிலே பெரிதும் விரும்பப்படும் மேனியெழில் பராமரிப்பு சோப்புதான் எனக்கு ஏற்றது.’’



செழுமையான, செறிவான நுரைதரும் மேனியெழில் பராமரிப்பு; நிகரற்ற நறுமணம். இரண்டும் ஒருங்கே அமைந்த ஒரே சோப்: இன்டர்நேஷனல் லக்ஸ்.

உலகிலே 70 நாடுகளில் சினிமா நட்சத்திரங்கள் இதையே பெரிதும் விரும்புவதில் வியப்பென்ன!

இப்போது, இந்த சர்வ தேச விருப்பத்தை நீங்களும் முயன்று பார்க்கலாம். இதோ, இந்தியாவிலேயே.




HTA 2881

**உலகெங்கும் சினிமா நட்சத்திரங்களின் அழகு சோப்.**

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமிக்க தயாரிப்பு.





# சப்தரைக் கொன்று விட்டார்கள் — ஆனால் சப்தர் சாக மறுக்கிறார்!

தில்லிக்கருகில் வீதி நாடகமொன்றை நடத்திக் கொண்டிருந்தார் சப்தர் ஹஸ்மி. அப்போது — பட்டப்பகலில் சில அரசியல் குண்டர்களால் தாக்கப்பட்டு மரணமடைந்தார். கணவரின் உடலைத் தகனம் செய்த அடுத்த நாளே, கணவர் தாக்கப்பட்ட அதே இடத்தில், அதே நாடகத்தைத் தொடர்ந்து நடத்திக் காட்டியதோடு, அதில் தாமும் ஒரு பாத்திரமேற்று நடித்தும் காட்டினார் சப்தர் ஹஸ்மியின் மனைவியான மலயஸ்ரீ. அவருடன் ஒரு பேட்டி....

கேள்வி: கடந்த ஜனவரி முதல் தேதி... புத்தாண்டு தினமான அன்று என்ன நடந்தது? விளக்கமாகச் சொல்லுங்கள்.

மலயஸ்ரீ: 'ஜனநாட்டிய மஞ்ச்' என்பது எங்கள் நாடகக் குழுவின் பெயர். தில்லிக்குக் கிழக்கே பதினைந்து கி. மீ. தூரத்திலுள்ள ஜந்தாபூர் தொழிற்பேட்டையில் வீதி நாடகம் போடுவதாக ஒப்புக் கொண்டிருந்தோம். சென்றோம். அப்போது பகல் மணி பன்னிரண்டரை. எங்களுக்காகத் தொழிலாள நண்பர்கள் காத்திருந்தார்கள். சுமார் எழுநூறு பேர் இருப்பார்கள். அவர்களுக்கு வணக்கம் சொல்லிவிட்டு உடனே நாடகத்தைத் தொடங்கினோம். 'ஹல்லாபோல்' (தாக்கும் முழக்கம்) என்ற அந்த நாடகம் சுமார் 35 நிமிடங்கள் நடக்கக் கூடியது. வேலை நிறுத்தம் முடிந்ததும் தொழிலாளர்கள் நடந்து கொள்வதைப் பற்றியது அது. முதல் காட்சி எப்போதும் போல கலகலப்பாக முழு நகைச் சுவையுடன் இருந்தது.

அப்போது திடீரென்று ஒரு கார் வந்தது. "தெருவை அடைத்துக் கொண்டிருக்கிறீர்களே, வழிவிடுங்கள்; வண்டி போக வேண்டும்," என்றார் காரிலிருந்த ஒருவர். நாங்கள் மிகவும் பணிவாக, "இது சிறு நாடகம்தான். பாதி முடிந்துவிட்டது. நீங்களும் இருந்து மீதியைப் பார்த்துவிட்டுச் செல்லுங்களேன்! அப்படி அவசரம் என்றால் மாற்றுப் பாதையில் செல்லுங்களேன்..." என்று நேசமாகவே கூறினோம். கார் உடனே திரும்பிப் போய் விட்டது.

சிறிது நேரத்தில் மறுபடியும் அந்தக் கார் வந்தது. அப்போது கார் மட்டும் வரவில்லை. காரைத் தொடர்ந்து சுமார் நூறு பேர் கைகளில் தடி, கடப்பாரை என்று பல்வேறு ஆயுதங்களுடன் வந்து எங்களைச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். இந்தச் சூழ்நிலை அங்கு ஒரு பீதியையும் குழப்பத்தையும் உருவாக்கவே, நாடகம் பார்த்துக் கொண்டிருந்தவர்கள் வேகமாகக் கலைய ஆரம்பித்தனர்.

நடித்துக் கொண்டிருந்த நாங்கள் அருகிலிருந்த தொழிற்சங்க அலுவலகத்திற்கு ஓடினோம். அவர்களும் எங்களைத் துரத்தி வந்தார்கள். நாங்கள் அடைக்கலம் தேடிச் சென்ற தொழிற்சங்க அலுவலகத்தில் கதவுத் தாழ்ப்பாள் கூடச் சரியாக இல்லை என்பதால் சப்தர் எங்களையெல்லாம் வேறு வீடுகளுக்குப் போகச் சொல்லிவிட்டுத் தாம் மட்டும் அங்கே இருந்து கொண்டு, தாக்க வந்த குண்டர்களைச் சமாதானப்படுத்த முயற்சி செய்திருக்கிறார். "தயவு செய்து பொறுங்கள். இப்போது என்ன? நாடகத்தைத்தான் நிறுத்தி விட்டோமே! நாங்கள் திரும்பவும் தில்லிக்கே போகிறோம். சரிதானே?" என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்திருக்கிறார். ஆயினும் அவர்கள் அவரை விடவில்லை. நாடகம் நடந்த அந்த நாற்சந்தி இடத்திற்கே அவரை இழுத்துக் கொண்டு சென்று, அவர் மயங்கிக் கீழே சரியும் வரை தலையிலேயே மறுபடியும் மறுபடியும் அடித்திருக்கிறார்கள்.

சந்தடியெல்லாம் சிறிது அடங்கிய போது, நாங்கள் ஒருவரையொருவர் தேடிக் கண்டு பிடித்து ஒன்று சேர்ந்தபோது சப்தரைக் காணவில்லை. தேடிய போது அவரை நாற்சந்தியில் அடித்துப் போட்டிருப்பதாகச் சொன்னார்கள். அன்று எங்கள் நாடகக் குழுவில் நடிக்க வந்த பிரஜேஷ் ஒரு டாக்டர். அவர் சப்தரைச் சோதித்தார். எல்லாம் உள் காயமாகவே இருந்ததால் அவரால் அப்போது ஒன்றும் தீர்மானிக்க முடியவில்லை. உடனே மருத்துவமனைக்கு சப்தரை எடுத்துச் செல்ல முயன்ற போது யாரும் அவரை எடுத்துச் செல்ல வாகனம் கொடுக்கக் கூட முன்வரவில்லை. இதற்கிடையில் உள்ளூர்த் தொழிலாளியான ராம்பகதூர் என்பவரையும் அவர்கள் சுட்டுக் கொன்றுவிட்டதால் அங்கு அத்தனை பயம் நிலவியது!



• சப்தர் ஹாஷ்மியும் மலயஸ்ரீயும்...

கடைசியில் வயதான ரிக்ஷாக்காரர் ஒருவரின் உதவியுடன் மருத்துவமனைக்குக் கொண்டு வந்தோம். அங்கு சோதித்துப் பார்த்த போதுதான் அந்த உள்காயங்களின் தீவிரம் புரிந்தது. "உங்கள் வீட்டில் பெரியவர்கள் இருந்தால் கூப்பிடுங்கள்," என்றார் டாக்டர். "பெரியவர், சிறியவர், ஆண் துணை, பெண் துணை எல்லாமே அவருக்கு நான்தான். சொல்லுங்கள்!" என்றேன் பதற்றத்துடன். சற்றே தயங்கிய டாக்டர், "மூளை சிதைந்திருக்கிறது. மூளைத் தண்டு உடைந்திருக்கிறது. எங்களால் முடிந்ததையெல்லாம் செய்து பார்க்கிறோம்," என்றார். ஆயினும் மறுநாள் இரவு சப்தர் என்னை விட்டு விட்டுச் சென்றே விட்டார்... இனி அவர் திரும்பி வரவே போவதில்லை...

கேள்வி: சப்தரின் தகனம் முடிந்த மறுநாளே நீங்கள் அதே இடத்திற்குச் சென்று, அதே நாடகத்தைத் தொடர்ந்து நடத்தினீர்களாமே?

மலயஸ்ரீ: ஆமாம். ஜனவரி நான்காம் தேதி மீண்டும் அங்கு சென்று அதே இடத்தில் அதே நாடகத்தை நடத்தினோம். எங்களைத் தாக்கியவர்கள், அங்கு காங்கிரஸ் கட்சி ஆதரவுடன் நகரசபைத் தேர்தலில் போட்டியிட்ட சுயேட்சை வேட்பாளரின் அடியாட்கள்தாம். எங்கள் நாடகத்தை, மக்கள் யாரும் நிறுத்தச் சொல்லவில்லை. அப்படியிருக்கும் போது குண்டர்களுக்குப் பயந்து ஏன் நடத்தாமல் இருக்க வேண்டும்? 'சப்தர் சிறிது குணமாகட்டும்; மீண்டும் அங்கு சென்று நாடகம் நடத்தியே தீர வேண்டும்' என்று சப்தர் மருத்துவமனையிலிருந்த போதே என்னுள் ஓர் உறுதி எழுந்தது. கடைசியில் சப்தர் இல்லாமலே அங்கு சென்று நாடகத்தை நடத்திக் காட்ட வேண்டியதாயிற்று.

கேள்வி: உங்கள் திருமணம் எப்படி நடந்தது? நீங்கள் ஹிந்து அவர் முஸ்லிம்...

மலயஸ்ரீ: பல தலைமுறைகளாக தில்லியிலேயே வாழும் வங்கப் பெண் நான். நான் தில்லி பல்கலைக் கழகத்தின் முதலாண்டு மாணவியாக இருந்தபோது ஐ. பி. டி. ஏ. என்னும் மக்கள் நாடக அரங்க ரிகர்சல் ஒன்றில்தான் முதன்முதலாக சப்தரைச் சந்தித்தேன். அப்போதெல்லாம் எங்களிடையே திருமண எண்ணம் ஏதும் ஏற்படவில்லை. கல்வி முடிந்து அவர் ஸ்ரீநகரிலுள்ள ஒரு கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றிய போது, நான் வேறொரு வேலையாக அங்கு செல்ல நேர்ந்தது. அங்கே நாங்கள் பழகிய போதுதான் இருவரும் திருமணம் செய்து கொள்ள முடிவு செய்தோம். இது நடந்தது 79 — ஆம் ஆண்டு கோடைகாலத்தில். திருமணத்திற்குப் பிறகு நானோ அல்லது அவரோ மதம் மாறவில்லை. சொந்த மதத்திலேயேதான் இருந்தோம். எங்களுக்கு அதுவொரு பிரச்னையாகவும் இருக்கவில்லை.

கேள்வி: பேராசிரியராக இருந்த சப்தருக்கு எப்படி வீதி நாடக இயக்கத்தில் ஆர்வம் பிறந்தது?

மலயஸ்ரீ: சப்தர் குடும்பமே கம்யூனிஸ்ட் குடும்பம். மாணவப் பருவத்திலேயே அவர் அரசியல் நாடகங்களில் பங்கு பெற்றிருக்



* வீதி நாடகம் ஒன்று நடக்கிறது...

கிறார். எனினும் வீதி நாடகங்களையே அவர் பெரிதும் விரும்பினார். காரணம், அதுதான் ஏழை எளிய மக்களிடம் நேரடியாகச் சென்று பிரச்னைகளைச் சுலபமாகப் புரிய வைக்க வல்லது என்பதுதான். குறைந்த பட்சம் பத்து நிமிடங்களிலிருந்து அதிக பட்சம் நாற்பது நிமிடங்களில் ஒரு மாபெரும் பிரச்னையைக் கூட வீதி நாடகங்களின் மூலம் மக்களுக்குப் புரிய வைத்துவிட முடியும். ஆப்பிரிக்க நீக்ரோ உரிமை இயக்கங்களிலும் மெக்ஸிகோவிலும் சீனப் புரட்சி சமயத்திலும் வீதி நாடகங்களின் பங்கு மிக முக்கியமானது. இதையெல்லாம் கருத்தில் கொண்டுதான் சப்தர் தமது வேலையைவிட்டு விட்டு தில்லிக்கே வந்து 'ஜனநாட்டிய மஞ்ச்' என்ற வீதி நாடக அமைப்பைத் தோற்றுவித்தார். நான் தில்லி சர்தார் படேல் வித்யாலயாவில் ஆசிரியையாகச் சேர்ந்தேன்.

கேள்வி: வீதி நாடகங்களின் தனித் தன்மை என்ன?

மலயஸ்ரீ: மேடை, ஒலி, ஒளி அமைப்புகள் மேக்கப் என்று எதுவுமே இல்லாமல், குறைந்த நடிகர்களைக் கொண்டு, பேச்சு மொழியில் சில பாடல்களுடன் பிரச்னைகளின் தீவிரத்தைச் சட்டென்று சில நிமிட நேரத்தில் பார்ப்போர் மனத்தில் பதிய வைப்பதுதான் இதன் தனித்தன்மை. சில ஆண்டுகளுக்கு முன்பு தில்லியில் பஸ் கட்டணம் உயர்த்தப்பட்ட போது, அது தவறு என்று மக்களிடம் எடுத்துச் சொல்ல விரும்பினார் சப்தர். உடனே "டி. டி. ஸி. கி தன்த்லி" என்று பன்னிரண்டு நிமிட நேர வீதி நாடகமொன்றைத் தயாரித்து பஸ் ஸ்டாண்டு பஸ் ஸ்டாண்டாக நடித்துக் காட்டி மக்களின் ஆதரவைத் திரட்டினார் சப்தர். அதைக் கண்ட அரசும் உடனே ஏற்றிய கட்டணத்தில் சிறிது குறைத்து விட்டது. இதுவரை இருபத்திரண்டு நாடகங்களை நான்காயிரம் காட்சிகளுக்குமேல் நடத்திக் காட்டியிருக்கிறார் சப்தர்.

கேள்வி: சப்தர் கடைசியாக என்ன செய்யத் திட்டமிட்டிருந்தார்?

மலயஸ்ரீ: ராஜீவ் காந்தி அரசு படாடோபமாக நடத்திய "அப்னா உத்ஸவ்" உண்மையில் இந்த நாட்டின் உண்மையான கலைஞர்களை இனம் கண்டு கொள்ளவில்லை என்ற கருத்து சப்தருக்கு உண்டு. அதனால் தாமே "ஜன உத்ஸவ்" என்று அகில இந்தியக் கிராமக் கலைவிழா நடத்தத் திட்டமிட்டிருந்தார். அவரின் அந்த ஆசையை அடுத்த ஆண்டு நிறைவேற்றுவதாக இருக்கிறோம். அவ்வப்போது சப்தர் குழந்தைகளுக்காக வேடிக்கையாக எழுதியிருக்கிறார். அவற்றையெல்லாம் தொகுத்து இப்போது ஆறு புத்தகங்களாகக் கொண்டு வந்திருக்கிறோம். அதன் விற்பனையெல்லாம் அவரது நினைவு டிரஸ்டுக்கு நிதியாகும். இந்த டிரஸ்ட் தொடர்ந்து செயலாற்றுவதற்கு சத்யஜித்ரே, ஷாபனா ஆஸ்மி போன்ற பலரும் உதவிகரமாய் இருப்பது எனக்கு மேலும் மேலும் சப்தர் பாதையில் செல்லும் உறுதியைக் கொடுக்கிறது. சப்தர் வீதி நாடகங்களின் உயிராக விளங்கி, வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

பேட்டி: **தம்பி சீனிவாசன்**

மலயஸ்ரீ புகைப்படம்:
**தில்லி ராஜகோபாலன்**



மூன்று முடிச்சுப் போட ஆரம்பித்த நாளிலிருந்து இன்றுவரை முடியாத அன்றாடப் பிரச்னைதான். இருந்தாலும் திரையில் பார்க்கும் போது எத்தனை புதுசாய்த் தெரிகிறது என்கிறீர்கள்! ஒரு டான்ஸ் இல்லை, ஒரு டிஷ்யூம் டிஷ்யூம் இல்லை, ஒரு கனவு சீன் இல்லை. 'அட, ஆமாம். நம்ம பக்கத்து வீட்டு விவகாரம், மெய்தான். நேற்றுக்கூட ஆபீசில் இப்படித்தான் நடந்தது' என்று அடுத்தடுத்துப் பார்த்து ரசித்துக் கொண்டே போகிற மாதிரி என்னமோ பண்ணியிருக்கிறாரே, அந்த அகஸ்தியரைத் தட்டிக் கொடுக்கத் தோன்றுகிறது.

# தாயா? தாரமா?

இருபத்தாறு வயதுப் பிள்ளையை எல்.கே.ஜி. மாணவனாய்ப் பாவித்துத் தலை வாரி, பவுடர் அடித்து, (சேகர்: 'திருஷ்டிப் பொட்டு வைக்க வேண்டியதுதான் பாக்கி!') பிளாஸ்க் வாட்டர் பாக் மாட்டிவிட்டு ரிக்ஷாவில் ஏற்றி அனுப்பும் அந்தப் பாசச் சிக்குழையில் ஆகட்டும்; கல்யாணத்துக்குப் பிறகு மனைவிக்குப் பின்னால் செல்லும் சேகரைக் கண்டு அதிர்ச்சி, ஏமாற்றம், துக்கம் அத்தனையையும் கண்ணீரில் கரைத்துக் கொள்ளும் அந்தக் குடும்பப்பாங்கிலாகட்டும், புன்னகை அரசி தாக்குப் பிடித்திருக்கிறார்.

மனோரமா! அடேங்கப்பா, என்ன ஒரு தன்னம்பிக்கை! 'புள்ளையைப் பெத்தவங்க கால்லதான் பொண்ணைப் பெத்தவங்க விழுந்தாகணும்னு ஒரு வழக்கம் இருந்துட்டு வருதே, அதை நான் மாத்திக் காட்டறேன்,' என்று சவால் விட்டுவிட்டுப் பெண்ணை இழுத்துக் கொண்டு ஆட்டோவில் ஏறிப் போகிறாரே, அங்கே தாய்க்குலத்தின் தனிப் பெருந்தலைவியாகி விட்டார் அவர்.

ஓய்வுபெற்ற பின் பி. ஏ. பட்டம் பெற்றுத் தீர்வது என்ற லட்சியத்துடன் நிர்க்குணப் பிரும்மமாய்த் தாமுண்டு, தம் படிப்புண்டு என்று ஒதுங்கியிருந்தாலும் சமயத்தில் குடும்பத் தலைமைப் பொறுப்பை எத்தனை கண்ணியமாய் வெளிப்படுத்துகிறார் டில்லி கணேஷ்! இதோ ஒரு குணச்சித்திர நடிகர் என்று இனம் காட்டுகிற நடிப்பு.

அப்பாவித்தனமான நடவடிக்கை, வேடிக்கைப் பேச்சுக்குள் ரேகாவை சுருட்டிப் போட்டுக் கொண்டது ஒருபுறமிருக்கட்டும், 'எனக்கு ரெண்டு பக்கமும் இடி. இந்தண்டை அம்மா, அந்தப் பக்கம் பெண்டாட்டி,' என்று சொல்லிக் கொண்டிருக்கும் போது ஆட்டோ ஹாரன் சப்தம் கேட்க, 'இவன் மூணாவது இடி,' என்று வெறுப்புக் கொட்டும் சங்கடம்; இறுதி வெற்றி முகத்தில் தூள் கிளப்பும் அந்த செட்டப் பேச்சு — நிஜமாகவே கதாநாயக அந்தஸ்துக்கு உயர்ந்துவிட்டார், எஸ். வி. சேகர்.

குடும்பப்பாங்கான இளமைக்கு ஒரு ரேகா. மாமியார் விஜயா சொன்னதும், வேண்டா வெறுப்பை வெளிக்காட்டாத அடக்கத்துடன், நல்ல மருமகளாய்க் கதவைச் சாத்திக் கொண்டு கறுப்புப் புடவையை உரித்துப் போட்டு மாற்றுப் புடவை உடுத்தும் 'பணிவு' என்ன; திருச்சி கல்யாணத்துக்குப் போகக் கூடாது என்று தடுக்கும் அடக்கம் மீறிய வெடிப்பில், மாமியாரை நேருக்கு நேர் சாடி, கணவனைக் கன்னாபின்னாவென்று கடிந்து கொண்டு, படுக்கை அறைக்குள் நுழைந்து, அத்தனை சாமான்களையும் வாரியிறைக்கும் ஆர்ப்பாட்டம் என்ன!

காந்திமதி காரெக்டரை வளர்த்துக் கொண்டு போகும் விதத்தில் யதார்த்தம் சற்று முறுக்கிக் கொள்கிற மாதிரி இல்லையோ?

மெயின் கதையே போதிய கலகலப்புடன் இருக்கும்போது ஒட்டாத ஒரு காமெடி ட்ராக் எதற்கு? போதாக்குறைக்கு தொட்டுக் கொள்ளச் சமுதாயப் பிரச்னை என்று ஒரு வேலையில்லாப் பட்டதாரி, ஒரு விதவைத் திருமணம்.

வயசான கட்டைகளின் கோணத்தில் உள்ள கதையை வாலிபங்களின் கோணத்தில் மாற்றியிருந்தால் இன்னும் எடுபட்டிருக்குமோ என்னவோ என்று தோன்றினாலும், படு யதார்த்தமான கதை நடப்பில் லயிக்கும் போது, தலை வாழை இலை போட்டுத் தஞ்சாவூர்க் கல்யாண விருந்து சாப்பிட்ட மாதிரி ஒரு நிறைவு ஏற்படுவதை மரியாதையாய் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

— பி. எஸ். எஸ்.

# உங்கள் நம்பகமான ஃபாரெக்ஸ் இப்போது, சுவையிலே சிகரம்!

உங்கள் குழந்தைக்கு நான்கு மாதம் ஆகும்போது அவனுக்கு புதிய சுவைமிக்க ஃபாரெக்ஸ் துவக்குங்கள். 3 முதல் 4 தேக்கரண்டி வெது வெதுப்பான நீரில் ஒரு தேக்கரண்டி ஃபாரெக்ஸ் கலந்து கொடுங்கள். ஃபாரெக்ஸ் சுவை மிக்கது. முன்னைவிட அதிக ஊட்டச்சத்து மிக்கது.






- சுவை மிக்கது
- ஊட்டச்சத்து மிக்கது

**ஃபாரெக்ஸ்® - சுவையுடன் வளரும் வழி.**

GX/66/213 TML



# அக்னி— அழிப்பதற்கு ஓர் ஆயுதம்!

அமெரிக்கா, ரஷ்யா, சீனா, பிரான்ஸ் ஆகிய நாடுகளோடு ஐந்தாவது இடத்தைப் பெறுமாறு ஒரு காரியத்தை இந்தியா செய்திருக்கிறதா என்று கேட்டால் 'ஓ அக்னி ஏவுகணையைத் தயாரித்திருக் கிறதே' என்று சொல்லலாம்!

ஒரு பெரிய சாதனைதான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் கூடவே வேதனை தரும் சில கேள்விகளும் எழுகின்றன என் பது உண்மை. இரண்டையுமே கவனிப் போம்.

அக்னியின் எடை 14 டன். நீளம் சுமார் 62 அடி. முழுக்க முழுக்க இந்திய விஞ் ஞானிகள், நம் நாட்டுச் சாதனங்களைக் கொண்டே, உருவாக்கிய ஏவுகணை என்ற சிறப்பு இதற்கு உண்டு. இந்த ஏவுகணை சுமார் 1500 கிலோ மீட்டர் தூரம் சென்று தாக்கக் கூடிய திறன் கொண்டது. இதை இன்னும் அதிகரிக்க இயலும். 'அக்னி' ஏவு கணை இடைத்தர வீச்சுள்ளது. சென்ற ஆண்டு பிப்ரவரியில், ஸ்ரீஹரிகோட்டா விலிருந்து 'பிருத்வி' ஏவுகணை, பரிசோ தனைக்காகச் செலுத்தப்பட்டது. இதன் வீச்சு சுமார் 250 கிலோ மீட்டர் தூரமே. 'திரி சூல்', 'ஆகாஷ்' இரண்டும் தரையிலிருந்து ஆகாயத்துக்குச் சென்று தாக்கும் ஏவுகணை கள். இவையும் பரிசோதனைக் கட்டத்தில் இருக்கின்றன.

ஹைதராபாதிலுள்ள டிஃபென்ஸ் ரிசர்ச் அண்ட் டெவலப்மென்ட் ஆர்கனைசேஷன், 1983 ல் தொடங்கிய ஆராய்ச்சியின் விளை வாகத்தான், இந்தியா ஏவுகணைகளை உரு வாக்க முடிந்தது. ஆனால், 'அக்னி' உருவாக, பாதுகாப்புத் துறையின் மேற்படி ஆராய்ச்சி மையம் மட்டுமே காரணம் இல்லை. தேசிய ஆராய்ச்சிக் கூடங்கள், பல்கலைக் கழகங் கள், விஞ்ஞானக் கல்விக் கூடங்கள் தவிர, தனியார் துறை நிறுவனங்களும்தான். அதனால்தான் இதைத் தேசிய வெற்றியாகக் குறிப்பிடுகிறார்கள்.

"'அக்னி' ஏவுகணை வானில் செலுத் தப்பட்டவுடன், அமெரிக்க அரசாங்கம் ஆத்திரமும் எரிச்சலும் அடைந்தது. மிஸஸ் மார்கரெட் டுட்வெயிலர் என்ற அதிகாரி, "இம் மாதிரி ஏவுகணை ஆயுதங்கள் பிராந் திய ஸ்திரத் தன்மையையும், அமைதியையும் குலைத்துவிடும்!" என்று சற்றுக் காட்ட மாகப் பேசியிருக்கிறார். இதைப் பொறுத் துக் கொள்ள முடியாத ஒரு நிருபர் உடனே, 'ஓகோ! அப்படியானால் இஸ்ரேல், பாகிஸ் தான் சமாசாரம் எல்லாம் எப்படி?' என்று கேட்டிருக்கிறார். மார்கரெட் அம்மையார் இதை எதிர்பார்க்கவில்லை. 'இந்தக் கேள் விக்கு என்னிடம் பதில் எதுவும் கிடை யாது!' என்று முகத்தைத் திருப்பிக் கொண்டு விட்டார்! வெள்ளை மாளிகையிலிருந்து "அக்னி தயாரிப்பை நிறுத்துங்கள்" என்று வேண்டுகோள் வந்ததும், "இது சோதனை தான். இப்போதைக்கு 'அக்னி' தயாரிப் பைத் தொடங்க மாட்டோம்!" என்று பதில் சொல்லிவிட்டது இந்திய அரசு!

பாகிஸ்தான் வெளிவிவகாரத் துறை அமைச்சர், 'இந்தியாவின் ஆயுதக் குவிப்பு, நியூக்ளியர் சப்மரீன் வாங்குதல், அக்னி ஏவுகணை, எல்லாம் பாகிஸ்தானுக்குக்

கவலை அளிக்கின்றன' என்று சற்றுக் கோபமாகச் சொல்லியிருக்கிறார். ஆனால் ராணுவ தளபதி மிர்சா அஸ்லாம் பெக், 'அக்னி'யினால் பாகிஸ்தானுக்கு எந்த ஆபத்தும் இல்லை என்று சற்று தைரிய மாகவே பேசியிருக்கிறார்!

சார்க் நாடுகள், அணிசேரா நாடுகள் எதுவுமே, 'அக்னி'யின் வெற்றியைப் பாராட்டி, பிரதமர் ராஜீவ் காந்தியைப் புகழவில்லை. ஒரு சம்பிரதாயத்துக்குக் கூடப் பாராட்டுச் செய்தி அனுப்பவில்லை என்பது கவனிக்கத் தக்கது. நமது சொல்லிலும் செயலிலும் முரண்பாடு இருப்பதையே இது உணர்த்துகிறது.

இதற்கு மறுபுறமும் உண்டு. "சீனாவிடம் வகை வகையான ஏவுகணைகள் இருக்கின்றன. இதில் அதிக பட்சம் திபெத்திலேயே வைக்கப்பட்டிருக்கின்றன. 1987ல் ஏவுகணை ஆராய்ச்சியில் இறங்கிய பாகிஸ்தான், தனது ஸ்பேஸ் அண்ட் அப்பர் அட்மாஸ்ஃபியர் ரிசர்ச் கமிஷன் அமைப்பின் ஆதரவில் ஏப்ரல் 25, 1988 ல் ஓர் ஏவுகணையைச் செலுத்தியிருக்கிறது. இதன் வீச்சு கிட்டத் தட்ட 800 கிலோ மீட்டர். தில்லி, பம்பாயைத் தாக்கும் திறன் உள்ளது. ஆகவே இந்தியா 'அக்னி'யை கட்டாயம் உருவாக்கத்தான் வேண்டும். அப்போது தான் தேசப் பாதுகாப்பு விஷயத்தில் நாமும் தைரியமாக நிலைமைகளை எதிர்கொள்ள முடியும்!' என்கிறார் தில்லி இன்ஸ்டிட்யூட் ஆஃப் டிஃபென்ஸ் ஸ்டடீஸ் அண்ட் அனாலிஸிஸ் இயக்குநர் ஏர் கம்மோடர் ஜஸ்ஜித் சிங்.

ஏவுகணை செலுத்தப்படும் இடத்திலிருந்து சுமார் மூன்றரை கிலோ மீட்டர் தூரத்திலுள்ளன பதினைந்து கிராமங்கள். இவற்றில் 11,000 பேர் வசிக்கிறார்கள். ஒன்றரை கிலோ மீட்டர் வட்டாரத்துக்குள் வசிக்கின்றன 56 குடும்பங்கள். எல்லாரையுமே மூன்று முறை பாதுகாப்பான இடத்துக்கு அழைத்துச் சென்று தங்க வைத்து விட்டது மாநில நிர்வாகம். பெரியவர்களுக்கு ஒரு நாளைக்கு 80 ரூபாயும், சிறியவர்களுக்கு 40 ரூபாயும் கொடுக்கப்பட்டதாம். "இப்படி ரூபாய் கொடுப்பதானால் எத்தனை தடவை வேண்டுமானாலும் ஏவுகணை விடட்டும்!" என்றார்களாம் கிராமவாசிகள். ஆனால் பல்லியபால் — போக்ராய் வட்டாரத்திலுள்ள சுமார் நூறு கிராமத்து மக்கள், இந்த ஏவுகணைத் தளத்தால் நான்கு வருடங்களாகச் சுற்றுச்சூழல் பாழாவதாகப் போராடி வருகிறார்கள்.

பேட்டிகள், கட்டுரை: **சாருகேசி**

அட்டையில் உள்ள விஞ்ஞானிகள் டாக்டர் அப்துல் கலாம், மற்றும் டாக்டர் அகர்வால் படங்கள் உதவி: **ஹிந்து**

## 'அக்னி'யை வளர்த்த அதிமுக்கியமானவர்!



'அக்னி' ஏவுகணை உருவாகக் காரணமானவர்கள் பட்டியலில் சுமார் நூறு விஞ்ஞானிகள் இருக்கின்றனர். இவர்களில் முக்கியமானவர், 'அக்னி' புராஜக்ட் டைரக்டர் ஆர்.என். அகர்வால் என்றும், அதி முக்கியமானவர், இன்டக்ரேட் கைடட் மிஸைல் டெவலப்மென்ட் புரோகிராம் டைரக்டர் டாக்டர் ஏ.பி.ஜே. அப்துல் கலாம் என்றும் சொல்லுகிறார்கள்.

அப்துல் கலாம் ராமேசுவரத்துக்காரர். வயது 58. ஏரோ—இஞ்ஜினீரிங் பட்டதாரி. அறுபதுகளில் நான்கு மாதப் பயிற்சிக்காக அமெரிக்காவிலுள்ள வாலப்ஸ் ஐலண்டு ராக்கெட் தளத்துக்குச் சென்றதோடு இவரது வெளிநாட்டு விஜயம் நின்றுவிட்டது. ஆனால் சென்ற வாரம் சி.ஐ.ஏ. தலைவர் வில்லியம் வெப்ஸ்டர் அமெரிக்க செனட்டில், அப்துல் கலாமின் அமெரிக்கப் பயிற்சியே அக்னி உருவாக்கியதற்கு அடிப்படை என்று கூறியிருக்கிறார். இதைக் கேட்டு இந்திய விஞ்ஞானிகள் சிரிக்கிறார்கள்.

கலாம் ஒரு பிரம்மசாரி. படு ஸ்ட்ரிக்ட் வெஜிடேரியன். வெகு எளிமையானவர். விஸ்தாரமான டைரக்டர் பங்களாவில் வசிக்காமல், மெஸ்ஸிலேயே மாடியில் ஓர் ஒற்றை அறையில் தங்கி வருகிறார். இளமை முதலே மிக எளிய வாழ்க்கையில் பழகியதே காரணம். அவர் தகப்பனார் ராமேசுவரம் கடற்கரையில் உள்ள சிப்பிகளையும் சங்குகளையும் விற்று வந்தவர்! இளமையிலேயே சொந்தக் காலில் நின்று கல்வி கற்றவர் கலாம்.

பொழுது போக்கு? "அதற்கெல்லாம் நேரமும் கிடையாது. பணமும் கிடையாது." ஆனால் படுக்கைக்குப் போகும் போது — கிட்டத்தட்ட நடுநிசியில் — இந்திப் பாட்டுக்கள் மட்டும் கேட்பதுண்டு. அவரது நண்பர்கள் சொல்லுவதைப் பார்த்தால், சுமார் இருபது மணி நேரம் தினசரி அவர் உழைப்பாராம்.

'அக்னி' ஏவுகணை விட்டதன் நோக்கம்?

சொல்கிறார் அப்துல் கலாம்: "பூமியிலிருந்து புறப்பட்டு விண் வெளியில் செல்லும் திறன் இதற்கு இருக்கிறதா என்று பரிசோதிக்கத்தான். அதன் முகப்பில் வைக்கப்படும் அணு அல்லது பிறவகைக் குண்டுகளோடு அதன் தொடர்பு எப்படி இருக்கிறது என்று பார்க்கத்தான். இது பரிசோதனையாக இருப்பதால் 'அக்னி'யின் முகப்பில் குண்டு எதையும் வைக்கவில்லை... ஏன், சமாதானத்தைக் குறிக்க ஒரு கொத்துப் பூக்களைக்கூட வைத்திருக்கலாம்! 'அக்னி' நமது திறமையையும், பலத்தையும் வெளிப்படுத்திய சாதனம். ஒரு நாடு பலமாக இருந்தால், பிற நாடுகள் அதைத் தாக்க ஒரு தடவைக்கு இரு தடவை யோசிக்கும். அப்படி இரு நாடுகளும் பலம் பொருந்தியதாக இருக்கும் போது ஒன்றை ஒன்று தாக்காது. தானாக அங்கே அமைதி நிலவும்."

படம்: எம்.ஏ. ரஹீம்.

# அக்னி ஏவுகணை அவசியம் தானா?



## — சி.எஸ். கூறுகிறார்

●● வல்லரசு நாடுகள் ஆயுதக் குறைப்பு, படைக் குறைப்பு என்று அறிவித்து வரும் இந்தச் சூழ் நிலையில், இந்தியா 'அக்னி' தயாரிப்பில் ஈடுபட்டிருக்கிறதே?

● முதலில் விஞ்ஞான நோக்கில் பார்ப்போம்: நமது விஞ்ஞானிகள் அரிய சாதனை செய்திருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. விஞ்ஞானிகள் வெளிநாடு சென்றால்தான் அவர்கள் திறமை வெளிப்படும் என்று சொல்லுவது வழக்கம். ஆனால் நம் நாட்டிலேயே சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்தால், வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தால், எந்தக் காரியத்தையும், **எந்த இலக்கையும் அடைந்து விடுவார்கள்** என்பதை அக்னி நிரூபித்துக் காட்டியிருக்கிறது. ஆனால் —

இந்த ஏவுகணையின் காரணமாக, நம் நாடு என்ன பயனைப் பெறப் போகிறது என்பது விவாதத்துக்குரிய விஷயம். இன்றைக்கு உலகச் சூழ்நிலையில் ஒரு பெரிய மாறுதல்: இதுவரை இருந்து வந்த ஆயுதப் போட்டி நிலைமை மாறி, ஆயுதங்களைக் குறைக்க வேண்டும் என்ற பேரியக்கம் உருவாகி வருகிறது. அதற்கு உருக் கொடுத்தவர், சோவியத் ரஷ்யத் தலைவர் கோர்பசேவ். மகாத்மா காந்தியுடைய கொள்கையை, இந்த அணுயுகத்திலும் உபயோகித்துப் பலன் பெற முடியும் என்பதை அவர் காட்டியிருக்கிறார். அமெரிக்கத் தலைவர் புஷ் அவர்களும் படைக் குறைப்பை ஆதரிக்கும் முறையில் சமீபத்தில் அறிவிப்பு ஒன்றை வெளியிட்டிருக்கிறார். இதனால், உலக ராணுவச் சூழலில் ஒரு மாறுதல் ஏற்படும் என எதிர்பார்க்கலாம்.

இந்தக் கட்டத்தில், இந்தியா, 'அக்னி' போன்ற புதிய ஆயுதங்களைத் தயாரிப்பதில் ஈடுபட வேண்டுமா என்பது கேள்விக்குரியது. நம்முடைய தற்காப்புக்காக இந்த ஏவுகணையை எவ்வாறு, எந்தச் சூழ்நிலையில் எவருக்கு எதிராகப் பயன் படுத்தப் போகிறோம் என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். இதுபற்றி அறிஞர்கள் கூடி விவாதிப்பது அவசியம்.

●● பொருளாதார நோக்கில் இந்தச் சாதனை பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

● பொருளாதார வளர்ச்சிக்கு, இந்த ஏவுகணை ஏதும் பயன்படுமா? — என் சிற்றறிவுக்கு எட்டிய வரையில், இதைப் பயன்படுத்தி நம் நாட்டில் உள்ள சிக்கலான பிரச்னைகளுக்கு, முக்கியமாக மக்களுடைய வறுமையைப் போக்கி நல் வாழ்வு கொடுக்க இந்தத் தொழில் நுட்பம் பயன்படுமா என்பது எனக்குத் தெரியவில்லை.

நம்முடைய நாடு ஏழை நாடு. வசதிகள் குறைந்த நாடு. இருக்கிற வசதிகளை எந்த முறையில் பயன் படுத்த வேண்டும் என்பது பற்றித் தீர ஆராய்ந்து முடிவெடுப்பது அவசியம். அதற்காகத்தான் பண்டித நேரு, 'திட்ட அடிப்படையில் பொருளாதார வளர்ச்சிக்கான வழிகளை வகுக்க **வேண்டும்' என்று அறிவித்தார். ஆனால் —**

**ராணுவச் செலவை இம்மாதிரி அலசிப் பார்க்கக் கூடாது என்று சிலர் சொல்லு**கிறார்கள். சமீபத்தில் பல கட்டுரைகள் 'அக்னி' ஏவுகணையால் ஏதோ நம் நாட்டுக்குப் பெரிய லாபம் ஏற்பட்டுவிடப் போவதாக எழுதப்பட்டிருப்பதையும் பார்க்கிறோம்.

●● அணு ஆயுதப் பாதுகாப்பு நமக்குத் தேவை இல்லையா?

● ஒரு சின்ன அணு ஆயுதத்தை வைத்துக் கொண்டு நாம் என்ன செய்யப் போகிறோம்? பெரிய பெரிய ராட்சச ஆயுதங்கள் எல்லாம் ஆயிரக் கணக்கில் வல்லரசுகள்

# இலக்கைச் சரியாகத் தாக்கும் அக்னி!



விஞ்ஞான ரீதியாக 'அக்னி' பற்றி எழுந்த சில கேள்விகளுக்கு விடையளிக்கும்படி ஐ.ஐ.டி.யின் விண்வெளி விஞ்ஞானத் துறையை அணுகிக் கேட்டோம். பேராசிரியர் ஒருவர் விளக்கினார்:

○○ குறிப்பிட்ட ஆயிரத்தைநூறு கிலோ மீட்டர் தூரம் போகாமல், முன்னாலேயே, நம் நாட்டு நகரம் ஒன்றிலேயே, விழுந்துவிடும் அபாயம் உண்டா?

○ கிடையவே கிடையாது. எந்த இடத்தைத் தாக்க வேண்டுமோ அதன் பிரதான அம்சங்கள் கொண்ட படம் அதில் இருக்கும். Radar picture matching ல் இந்தப் படமும், தாக்கப்படும் இடமும் 'டிஜிடைஸ்' செய்யப்பட்டு ஒன்றாக இருந்தால்தான் 'அக்னி' அந்த இடத்தைத் தாக்கும். அக்யூரஸி ரொம்பக் கச்சிதமாக இருக்கும்.

○○ இந்த 'மிஷன் கண்ட்ரோல்' பல இடங்களில் இருக்குமா?

○ ஆகாய விமானத்துக்கு ஏர் ட்ராஃபிக் கண்ட்ரோல் டவர்ஸ் இருப்பது மாதிரி, இதற்கும் உண்டு. சரியான பாதையில் ஒழுங்காகச் செல்வதற்குத்தான் இவை இருக்கின்றன. தவறிப்போனால் திருத்தி, திருப்ப முடியும். நேவிகேஷன் முறைகளும் இதில் இருக்கின்றன; பாதையைச் சரியாகக் கவனிக்க இரண்டு, மூன்று இடங்களில் இருக்கும். சாடிலைட் மூலமாகவும் இதைக் கண்காணிக்கலாம். ஏவுகணையைச் செலுத்துவதற்கு முன்னாலேயே அந்த சாடிலைட்டை ஆகாயத்தில் செலுத்திவிட வேண்டும்.

○○ இதிலும் பழைய SLV-3 பெயர் அடிபடுகிறதே? அது ஏன்?

○ ஏவுகணையின் இருபுறமும் அமைந்த ராக்கெட் எஞ்சின்தான், ஏவுகணை கிளம்பி மேலே செல்ல உந்துதல் சக்தியாகப் பயன்படுகிறது. SLV-3யில் இருந்தமாதிரியே இதற்கும் வைத்திருந்தது. அதனால்தான் அந்தப் பெயர் அடிபடுகிறது.

○○ இது என்ன ஃபர்ஸ்ட் ஸ்டேஜ், செகண்ட் ஸ்டேஜ்?

○ ஸீரோ ஸ்டேஜில், முன்பு சொன்ன SLV, ஏவுகணையோடு மேலே போய் வெடித்து, பிரிந்து, கழன்று விழுந்து விடும். பிறகு, முதல் ஸ்டேஜில் ஏவுகணையின் அடிப்பகுதி வெடித்துச் சீறிப் பாயும். இரண்டாவது ஸ்டேஜில், ஏவுகணையின் முகப்பில், வைக்கப்படும் வெடிகுண்டு பிரிந்து, தாக்கும் இலக்கில் விழும். இதிலேயே அடுத்த திட்டம் என்ன என்றால், முதல் ஸ்டேஜில் ஏவுகணைப் பகுதி விழுந்த உடனேயே, அதை எடுத்து, மறுபடி உபயோகிக்க முயலுவதுதான். ஆனால் அதற்குச் சேதம் எதுவும் விளையாமல், பாராசூட் மாதிரி ஏதாவது ஒரு சாதனத்துடன் நிதானமாய் இறங்கும்படி பண்ணினால்தான் இது சாத்தியம். இதுவரை எந்த நாடும் இதைச் செய்யவில்லை.

○○ ஏவுகணையின் முகப்பில் வைக்கப்படும் வெடிகுண்டைப் பொறுத்து, அது சென்று தாக்கும் தூரம் மாறுபடுமா?

○ முகப்பில் வைக்கப்படும் அணு அல்லது பிற வெடிகுண்டை Payload என்பார்கள். இதன் எடை கூடக் கூட, ஏவுகணை செல்லும் தூரம் குறையும். உதாரணமாக 50 கிலோ எடையுள்ள 'பே லோட்' 1000 கிலோ மீட்டர் சென்று தாக்கும் என்றால், 100 கிலோ எடையுள்ள 'பேலோட்' 500 கிலோ மீட்டர் தூரமே செல்லும். ஆனால் இது மட்டுமே தூரத்தை நிர்ணயிப்பதில்லை. ஏவுகணையின் அளவும் இதில் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படும்.

○○ இதில் க்ளோஸ்டுலூப் கைடன்ஸ், டெர்மினல் கைடன்ஸ் என்கிறார்களே, அப்படி என்றால் என்ன?

○ ஏவுகணையின் பெரும்பகுதிப் பயணமும் 'க்ளோஸ்டு லூப் கைடன்ஸ்' மூலமாகத்தான் அமையும். 'டெர்மினல் கைடன்ஸ்,' தாக்கப்பட வேண்டிய இடத்தை மிகச் சரியாகக் காட்டிக் கொடுக்கும்.

---

வைத்திருக்கக் கூடிய சூழ்நிலையில், நாமும் ஓர் அணு ஆயுதம் வைத்திருக்கிறோம் என்கிற உண்மை எந்த அளவுக்குப் பயன் தரும் என்பது பற்றி யோசிக்க வேண்டும். இந்தியா இன்றைக்கு உலக சமாதானத்தை நிறுவப் பாடுபடும் நாடாக இருந்து வருகிறது. அந்தச் சமாதானத்தை நிலை நிறுத்துவது நமது ராணுவ பலத்தின் அடிப்படையிலா, அல்லது தார்மீக பலத்தின் அடிப்படையிலா என்று சிந்திக்க வேண்டும். அணு ஆயுதம் யாரை நோக்கி ஏவப்படுகிறதோ அவர்களை மட்டுமின்றி ஏவுகிறவர்களையும் அழிக்கிறது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். இவைகளை எல்லாம் சரிவர ஆராய்ந்து நாம் ஒரு முடிவு எடுக்க வேண்டும். 'கல்கி' போன்ற பத்திரிகைகளும், அறிஞர்கள் பலரும், இதை விருப்பு வெறுப்பு இன்றி ஆராய்ந்து விவாதிக்க வேண்டியது இன்றைய தேவை.





வாத்யாரே! உங்க கால் தூசுக்கு நாங்க சமானமில்லே!
கம்பன்
ஜெனரல் டயர்
ஹிட்லர்



சிங்கள பயங்கர வாதிகள்
புலிகள்
அமைதிப் படை
பிரேமதாச



ஆட்சிக்குள் கட்சி நுழையக் கூடாது!



..நுழையல்லே! குச்சியை யாவது கொஞ்சம் நீட்டிக்குவோமே!
உடன் பிறப்பு




# கல்கி

1989 ஜூன் 18
மலர் 47 இதழ் 46
சுக்ல ஆனி 4




# பெய்ஜிங் படுகொலை!

சீனப் பெருஞ்சுவரைப் போல் உலகமே ஸ்தம்பித்து நிற்கிறது! 'இப்படிப்பட்ட அக்கிரமத்தைச் சரித்திரத்திலேயே கண்டதில்லையே' என்று திகைக்கிறோம். புராணங்களில்கூட ஓர் அரக்கன் இந்த அளவுக்கு அசுரத்தனமாக நடந்து கொண்டதாகக் கதை கிடையாது. ஹிட்லர் கூடத் தனக்குப் பிடிக்காத யூத மக்களை மட்டும்தான் தனிமைப்படுத்திக் கொன்றானே தவிர, ராணுவத்தை ஏவி, தனது மக்களையே கொன்று குவித்தானில்லை.

சீனாவில் நடந்தது ஜாலியன் வாலா பாக் படுகொலையை விடப் பயங்கரமானது! இங்கே நடந்தது அந்நியர் ஆட்சி. அதனை எதிர்த்து நின்றனர் நம் மக்கள். சீனாவிலோ சீனத் தலைமை, சீன மக்களையே, அதிலும் மாணவர்களை — ஆயிரம் ஆயிரம் கனவுகளைச் சுமந்து கொண்டிருக்கும் இளைஞர்களை — ராணுவத்தை ஏவி நசுக்கியும் சுட்டுத் தள்ளியும் அழித்திருக்கிறது. அப்படி அந்த இளைஞர்கள்தான் என்ன குற்றம் செய்து விட்டார்கள்? மக்கள் நலனுக்காகத்தான் கம்யூனிஸ சித்தாந்தமே தவிர, கம்யூனிஸத்துக்காக மக்கள் நலன் அடிமைப்படக் கூடாது என்றார்கள். இன்னும் கொஞ்சம் சுதந்திரம் கேட்டார்கள். பேச்சுரிமை வேண்டினார்கள். கட்டுப்பாடுகளைத் தளர்த்தச் சொன்னார்கள். லஞ்ச ஊழலைக் குறைக்கச் சொன்னார்கள். இவ்வளவுதான். இதையும் சாத்துவிக முறையில் தான் கேட்டார்கள். இதற்காகவா புழு பூச்சிகளை அழிப்பதுபோல் நிராயுதபாணிகளான மாணவர்களைப் பல்லாயிரக்கணக்கில் நசுக்கிக் கொல்வது? அவர்களில் எத்தனை எதிர்காலப் பேரறிஞர்கள் இருந்தார்களோ! விஞ்ஞானிகள் இருந்தார்களோ! அத்தனை பேரும் வீரசொர்க்கம் புகுந்தார்கள்.

ருஷ்யாவில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்கள்தாம் இவர்களுக்குச் சுதந்திரங்களைக் கோரத் துணிவைத் தந்தன. அதிலென்ன குற்றம்? கம்யூனிஸத்தின் தாயகமே மாஸ்கோதானே? அங்கு ஏற்படும் மாற்றங்களின் எதிரொலிகள் இதர கம்யூனிஸ நாடுகளிலும் கேட்கத்தானே செய்யும்?

அதிகாரங்களை மையத்தில் ஒருவரிடமே குவிப்பதும் ஒப்படைப்பதும் ஆபத்தானது என்பதற்கு எத்தனையோ முன் உதாரணங்களை நமக்குச் சரித்திரம் எடுத்துக் காட்டுகிறது. சீனாவில் அண்மையில் நடந்த சோகம் மேலும் ஒரு வன்மையான சான்று. சர்வாதிகாரியாக விளங்கும் ஒரு தலைவர் அறிஞராகவும், அடக்கமானவராகவும், கண்டிப்புள்ளவராகவும், கருணை மிக்கவராகவும் இருந்து விட்டால் கவலை இல்லை. ஆனால் அந்தச் சர்வாதிகாரி ஆணவம் மிக்கவராகவும் அதிகார வெறி கொண்டவராகவும் இருந்து விட்டால் மக்களின் துன்பம் சொல்லில் அடங்காததாகி விடும். எனவேதான் அதிகாரங்களைப் பரவலாக்கும் அரசியல் அமைப்பே சிறந்தது என்று அறிஞர்கள் நாடாளுமன்ற ஜனநாயகத்தை உருவாக்கினார்கள்.

சீனாவில் நடந்த படுகொலை, உலகெங்கும் ஒரு தார்மீகக் கோபத்தை உருவாக்கியிருக்கிறது. சீனாவுடன் நெருங்கிய நட்புறவு கொண்ட அமெரிக்கா கூட இனி யுத்த தளவாட விற்பனை கிடையாது என்றும், அமெரிக்க — சீன உறவுகளை மறுபரிசீலனை செய்ய வேண்டியிருக்கும் என்றும் கடுமையான அறிக்கை விட்டு சீனத் தலைமையை எச்சரித்திருக்கிறது. நமது இந்திய அரசு மட்டும் வன்மையாகக் கண்டிப்பதற்குப் பதில் வருத்தம் தெரிவித்ததுடன் நிறுத்திக் கொண்டது! பெய்ஜிங், தியானென் மன் சதுக்கத்தில் நடந்த படுகொலையை நமது டி. வி. யில் காட்டக் கூடாது என்று தடை உத்தரவும் போட்டு விட்டது! இவையெல்லாம் வெட்கக்கேடான — இந்தியக் குடிமகனுக்குத் தலைகுனிவை ஏற்படுத்துகிற — போக்குகள்.

சீனாவில் நடந்த சோகக் கதை முடிந்து போன விஷயமல்ல. தியானென் மன் சதுக்கத்தில் சிந்தப்பட்ட ஒவ்வொரு துளி மாணவ ரத்தத்திலிருந்தும் விடுதலை வேட்கையும் சுதந்திர ஆர்வமும் கொண்ட ஓராயிரம் சீன மக்கள் தோன்றுவார்கள்; பொங்கி எழுவார்கள். அதற்கான அறிகுறிகளை இப்போதே காண்கிறோம்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# ஜெயலலிதா தலைமறைவு அரசியல் நடத்துகி-றாரே?



* இயற்கை வைத்தியம்



* சின்ன விஷயம்...



* நோபல் பரிசு?!



* திருகுவலி!

* **பாலகிருஷ்ணன், மதுரை.**

**? சில பேச்சாளர்கள் அடிக்கடி 'எண்ணிப் பாருங்கள்' என்கிறார்களே, எதை எண்ணிப் பார்ப்பது?**

! இந்த மாதிரி பேச்சாளரிடம் வந்து மாட்டிக் கொண்டு விட்டோமே என்றுதான்!

* **ரேவதி சுந்தரராஜன், சென்னை — 28.**

**? வி. பி. சிங்குடன் சின்ன விஷயத்தில் கருணாநிதி ஒத்துப் போக மறுப்பது ஏன்?**

! அது சின்ன விஷயமாக இல்லாததுதான் காரணம்!

* **பா. புஷ்ப முருகேசன், சின்னமனூர்.**

**? காஞ்சி கோயில் தேரை இழுக்க புல்டோசர் பயன்பட்டிருக்கிறதே?**

! காலத்துக்கு ஏற்ப கோயில்களில் சில அறிவியல் சாதனங்களைப் பயன்படுத்துவதில் தவறில்லை. ஒலி பெருக்கி, மின் விளக்கு, ஏர் கண்டிஷனர், ஏன் வீடியோ கூடப் பயனாகிறதே!

* **இரா. ம. வடுகநாதன், வேதாரண்யம்.**

**? ரஷ்யாவின் ராணுவச் செலவுகளைப் பெருமளவு குறைக்கப் போவதாக கோர்பச்சேவ் அறிவித்துள்ளது குறித்து!**

! படிப்படியாகப் பல அம்சங்களில் அவர் விட்டுக் கொடுத்து அமைதிப் பணியாற்றவே, முதலில் அவரைச் சந்தேகத்துடன் பார்த்து, பிறகு ஏளனமும் செய்த அமெரிக்கா, இப்போது தன் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளத் தானும் தன் பங்குக்குப் படைக் குறைப்பை அறிவித்திருக்கிறது! ஆயுதம் மற்றும் படைக் குறைப்பில் போட்டா போட்டி இன்னும் தீவிரமடைந்தால் உலகம் மகிழ்ந்து, வல்லரசுகளுக்கு நன்றி கூறும்.

* **ஆர். வேலுமணி, கடலூர்.**

**? எஸ். வி. சேகர் நாரதர் பத்திரிகையின் ஆசிரியர் ஆனது குறித்து...?**

! நன்மையில் முடிந்தால் சரி.

* **எஸ். ஸ்ரீராமன், சென்னை — 44.**

**? ஜனாதிபதி டொனேஷன் கொடுமையை எதிர்த்துப் போர்க்குரல் எழுப்பியும் பயனில்லையே?**

! நமது அரசியலில் ஜனாதிபதிக்கு யோசனை சொல்வதற்கு மட்டும்தான் அதிகாரம், செயல்படுத்தும் அதிகாரம் இல்லை. யோசனைகளை ஏற்றுச் செயல்பட வேண்டியவர்கள் அலட்சியப்படுத்தினால் அவர் என்ன செய்ய முடியும்?



* யோசனை மட்டுமே!



* 'நாரதர்!'

* எம். ராஜேந்திரன், லால்குடி.

? பிரியங்கா, அசல் இந்திரா காந்தி போலவே இருக்கிறாரே?

! அப்படியா! அடுத்த தலைமுறைத் தலைமை பற்றிய கவலை விட்டது, போங்கள்!

* த. சத்தியநாராயணன், சென்னை — 23.

? ஜெயலலிதா தலைமறைவு அரசியல் நடத்துகிறாரே?

! மூட்டு வலிக்கு இயற்கை வைத்தியம் செய்துகொண்டுதிரும்பிவரும்போது, கார்ட்டூன் சித்திரக்காரர்கள் பெரிய ஏமாற்றத்துக்கு உள்ளாகப் போகிறார்கள். உடல் இளைத்தும் திரும்புவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது!

* ஏ. பி. வரதராஜப்பெருமாள், திருத்தங்கல்.*

? ஜப்பானியப் பிரதமர், அமெரிக்க நாடாளுமன்ற சபாநாயகர் ஆகியோரின் ராஜினாமா எதைக் காட்டுகிறது?

! மனச்சாட்சிக்கு அஞ்சியவர்கள், தார்மிகப்பொறுப்பேற்கத்தயங்காதவர்கள், ஜனநாயக மரபு அறிந்தவர்கள் இந்தியாவில் இல்லாவிட்டாலும் மேல் நாட்டு ஜனநாயகங்களிலாவது இருக்கிறார்கள் என்பதைத்தான்.

* கே. ஆர். பவானி, கும்பகோணம்.

? 'புகழ்பெற்ற கவிஞர்கள் பலர் கெட்ட பழக்கம் இருந்ததால்தானே புகழ்பெற முடிந்தது?' என்று கேட்கிறாள் என் தோழி...

! எத்தனையோ பேரிடம் கெட்ட பழக்கங்கள் மட்டும்தானே உள்ளன? அவர்களால் புகழ் பெற முடிந்ததா?' என்று நீங்கள் திருப்பிக் கேட்க வேண்டியதுதானே?

* டி. சீனிவாசன், சென்னை.

? 'கவிதைத் துறையில் நோபல் பரிசு பெறுவதே என் லட்சியம்' என்ற வைரமுத்துவின் கூற்று பற்றி...?

! அவருக்கு மட்டுமென்ன எல்லா இலக்கிய கர்த்தாக்களுக்கும் உயர்ந்ததொரு லட்சியம் இருக்க வேண்டும்தான். ஆனால் ஒன்று, அதை முரசு கொட்டி அறிவிக்க அவசியம் இல்லை; ஏளனத்துக்குள்ளாகிவிடும். இரண்டு, சினிமாப் பாட்டினால் அதை அடைய முடியாது. 'பணம் சம்பாதித்தது போதும்' என்ற மனப்பக்குவம் உருவான பிறகு, வெளியே வந்து, உழைக்க வேண்டும். மூன்று, அவருக்குத் தெரியுமோ என்னவோ, நோபல் பரிசு விஷயத்திலும் நம் நாட்டைப் போலவே தில்லுமுல்லு உண்டு! அதை விவரித்து ஒரு நாவலே எழுதப்பட்டிருக்கிறது!

* மு. திருநாவுக்கரசு, மொரப்பூர்.

? ஜனகராஜ், சத்யராஜ் தெரியும், யார் இந்தப் பஞ்சாயத் ராஜ்?

! என்னய்யா இப்படிக் கேட்டு விட்டீர்கள்? இந்தப் புதுமுகக் கதாநாயகனை நம்பித் தானே ராஜீவ்காந்தி தேர்தல்சினிமா தயாரிப்பில் இறங்கி இருக்கிறார்!

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'திரைப்படங்கள் மக்கள் மனத்தில் ஏற்படுத்தக் கூடிய பாதகமான விளைவுகளுக்கான சமுதாயப் பொறுப்பைத் திரைப்படத் தயாரிப்பாளர்கள் தட்டிக் கழித்துவிட முடியாது' என்ற ஜனாதிபதி ஆர். வி. யின் கருத்து பற்றி?

! ஒவ்வொரு முறையும் சினிமா தொடர்பான ஏதாவதொரு பரிசளிப்பு விழாவின் போது ஜனாதிபதி இதைச் சொல்லித் தமது கடமை தீர்ந்தது என்று தட்டிக் கழித்து விட்டுப் போவார்; தயாரிப்பாளர்களும் அவர் பேச்சுக்குக் கைதட்டி ஆமோதித்ததுடன் தங்கள் பொறுப்பு விட்டது என்று தட்டிக் கழித்துவிட்டுப் போவார்கள். வழக்கமான கதைதானே!

* எஸ். சையது ஆரீஃப், இடையகோட்டை.

? 'ஒரு சிப்பாய் கூடப் பாக்கியில்லாமல் இந்திய அமைதிப்படையினர் இலங்கையை விட்டு வெளியேறிவிட வேண்டும்' என்று பிரேமதாசா காலக்கெடு கூட விதித்திருக்கிறாரே?

! அமைதிப் படை வெளியேறுவது கஷ்டமான விஷயமே அல்ல. இந்தியாவுக்கு ஒரு பெரிய தலைவலி தீர்ந்து போகும். ஆனால் பிரேமதாசாவுக்கும் ஈழத் தமிழர்களுக்கும் திருகுவலி ஆரம்பமாகும். அமைதிப் படையை வெளியேறச் சொல்லு முன்னர் பிரேமதாசா பின்வரும் விஷயங்களை உறுதிப்படுத்திக் கொள்வது நல்லது. 1. விடுதலைப்புலிகள் தனிச் சுதந்திர ஈழநாடு கோரிக்கையை விட்டுவிட்டார்களா? 2. ஆயுதங்களை ஒப்படைத்துவிட்டு ஜனநாயக நீரோட்டத்தில் கலந்து விடுவார்களா? 3. தமிழர் பகுதிகளில் சிங்களவரைக் குடியேற்றுவது போன்ற முறையற்ற காரியங்களைக் கைவிட்டுத் தமிழர்களுக்குச் சம உரிமைகள் தந்து கௌரவமாக நடத்த இலங்கை அரசு தயாராக இருக்கிறதா? 4. எடுக்கப்படும் முடிவுகளுக்கு இன்று தமிழர் வாழ் பகுதியில் ஆட்சியில் உள்ள வரதராஜப்பெருமாள் அரசின் சம்மதத்தையும் பெற்றுச் சுமுகமான ஒரு தீர்வுக்கு வர முடியுமா?

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

ஏ. பி. வரதராஜப்பெருமாள்,
183, தெற்கு ரதவீதி,
திருத்தங்கல் — 626 130.
சிவகாசி (வழி).

# வீடியோ நடத்தி வைத்த கல்யாணம்!

### பெண்களை இழிவுபடுத்தும் விளம்பரங்கள்

○○ டி.வி.யில் காண்பிக்கப்படும் பல விளம்பரங்களில் பெண்களை இழிவுபடுத்துவது போலப் பல விஷயங்கள் உள்ளன. உதாரணத்திற்கு: தலைவலிக்கு மருந்து கேட்கும் வாடிக்கையாளரிடம் கடைக்காரர், ''சம்சாரத்தோட சண்டையால ஏற்பட்ட தலைவலியா, இல்லை வேறேதாவது தலைவலியா?'' என்கிறார். ஏன் சார், எல்லாப் பெண்களும் பொழுது விடிந்து பொழுது போனால் கணவன்மார்களுடன் சண்டை தான் போட்டுக் கொண்டிருக்கிறார்களா? இல்லை, கணவன்மார்கள் அத்தனை பேருமே உத்தமர்களா? ஏன், கணவன் சண்டை போட்டதால் மனைவிக்குத் தலைவலி வந்தது போல விளம்பரத்தை மாற்றி அமைக்கட்டுமே, பார்க்கலாம்! பெண் என்றால் இளப்பமா?

— கோமதி பாலசுப்ரமண்யம்,
சென்னை — 33.

### தலைவலி கானம்

○○ சென்னைத் தொலைக் காட்சியில் 'தேசபக்தி கானம்' என்ற நிகழ்ச்சியில் இரண்டு கானங்கள் இடம் பெற்றன. அந்தக் 'கானங்களை'க் கேட்டவர்க்குத் தேசபக்தி வந்திருக்குமோ இல்லையோ, தலைவலி நிச்சயம் வந்திருக்கும். முதலில், அவை பாடல்களே அல்ல; வசனங்கள். அடுத்து இசை; ஒரே இம்சை. டி.வி.க்கென்றே இப்படி இசையமைக்க எங்கே தான் கற்றுக் கொண்டு வருகிறார்களோ தெரியவில்லை! அதுவும் சேர்ந்திசை! பாவம், அந்தச் சிறுமிகள்! அவர்கள் முகத்தில் இயல்பான ஒரு சிரிப்போ மலர்ச்சியோ தென்பட வழியில்லை. ஒரு இதமோ, நயமோ இல்லாத மெட்டமைப்பு. 'எப்படா பாட்டு முடியும்' என்பது போல் பாடுவோர் முகத்தில் ஒரே டென்ஷன். அந்தச் சிறுமிகளை முகத்தில் எந்த உணர்ச்சியும் இல்லாமல் பாட வைத்தது கொடுமை. இந்த நிலையில் பாடலைக் கேட்பவர்க்கும் நிகழ்ச்சியைக் காண்பவர்க்கும் தேசபக்தி குறித்து என்ன உணர்ச்சி எழும்?

இதற்கு அடுத்ததாக, 'எங்கும் எதிலும் கம்ப்யூட்டர்' என்றொரு நிகழ்ச்சி; அதில், இந்தியாவை 21—ம் நூற்றாண்டுக்கு அழைத்துச் செல்லக் கம்ப்யூட்டர் வந்து விட்டது என்றெல்லாம் சொல்லப்பட்டது.

நம் டி.வி. நிகழ்ச்சிகளைப் பதினொன்றாம் நூற்றாண்டிலிருந்து நவீனத்துக்கு இழுத்து வரக் கம்ப்யூட்டர் ஒன்று எப்போது கண்டுபிடிக்கப்படும்?

— என். சிவன், நாகர்கோவில்.

### சண்டையைக் குறைக்க எந்த பட்டன்?

○○ என் கணவருக்கு தொட்டதற்கெல்லாம் முணுக்கென்று கோபம் வந்து விடும். ஒரு நாள் நானும் பதிலுக்கு ஏதோ கத்தி விட, அவரது கோபம் அதிகமாகி, உச்சஸ்தாயியில் கத்த ஆரம்பித்தார். அப்போது ''தாத்தா'' என்ற குரல் கேட்டு இருவரும் திரும்பினோம். எங்கள் கடைக்குட்டிப் பேத்தி அர்ச்சனா, டி.வி. ரிமோட் கன்ட்ரோலரை எங்களை நோக்கிப் பிடித்துக் கொண்டு பட்டனை மாறி மாறி அழுத்திக் கொண்டிருந்தாள். ''தாத்தா, இதிலே சத்தத்தைக் குறைக்க எந்த பட்டனை அமுக்கணும்! எதை அமுக்கினாலும் உங்க சத்தம் குறைய மாட்டேங்கிறதே!'' என்றாள். நாங்கள் அசடு வழிந்து கொண்டே, சிரித்து விட்டோம். அப்புறம் 'சண்டை போடுவதில்லை' என்று தீர்மானித்தோம். அதாவது குழந்தை எதிரில் இருக்கும் போது மட்டும்!

— ஏ. தனலெட்சுமி, மதுரை — 1.

### அத்தையை இங்கே பாருங்கள்!

○○ என் பெண்ணுக்கு வரனுக்கு அலையாய் அலைந்தும் ஒன்றும் கூடி வராமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தோம். ஒரு மாறுதலுக்காக அவளை எங்கள் உறவினர் வீட்டிற்கு மதுரைக்கு அனுப்பி வைத்தோம். அவள் போன மறுநாளே நாங்கள் ஜாதகம்



..சுவிட்சை இப்படித்தான் 'ஆன்' பண்ணணும்!....




அனுப்பி விண்ணப்பித்திருந்த வரன் தமது அண்ணன், அண்ணியுடன் வந்திருந்தார். ராத்திரியே டெல்லிக்குப் புறப்பட்டுப் போக வேண்டும். அதற்குள் பெண்ணைப் பார்த்து விட்டுப் போகலாம் என்று வந்தோம் என்றனர். அவர்கள் பெண் பார்க்க வருவதாக எங்களுக்குத் தபால் போட்டிருந்தும் அது எங்களுக்குக் கிடைக்க வில்லை. இந்தச் சமயம் பெண் ஊரில் இல் லையே என வருந்தினோம். அப்போது மூன்றே வயதான என் பேரன் குடுகுடு வென ஓடி வந்து, "தாத்தா, என் பர்த்டே வீடியோவில் அத்தையைப் பார்க்கலாமே" என்று காஸெட்டை எடுத்து வந்து விட் டான்! எங்களுக்குக் கூடத் தோன்றவில்லை; அவனுக்கு எப்படித் தோன்றிற்று என எங்களுக்கெல்லாம் ஒரே ஆச்சரியம்! வந்திருந்தவர்களோ அவனுடைய பேச்சைக் கேட்டு அதிசயித்து விட்டனர். வீடியோ போட்டுக் காண்பித்தோம். ள்பயனுக்குப் பெண்ணைப் பிடித்து விட்டது. ஒரே வாரத் தில் கல்யாணம் நிச்சயம் ஆகி விட்டது!

— தங்கம் ராமசாமி, செங்கல்பட்டு.

## டீ. வி. யில் ஏமாற்றுகிறார்கள்...

○○ எனது மகன் டீ.வி. மகாபாரதத் தொடரில் பீமனும், துரியோதனனும் சண் டைக்குப் பயன்படுத்தும் கதையைப் போல் தனக்கும் ஒன்று வேண்டும் என்று அடம் பிடித்தான். நானும் ஒரு விடுமுறை நாளில் மூங்கில் சிம்பு கொண்டு கதையைப் போல் ஒன்று தயாரித்துப் பொன்னிற ஜிகினாத் தாள் ஒட்டிக் கொடுத்தேன். முதலில் அதை எல்லோரிடமும் காட்டி பெருமைப்பட்டுக் கொண்டான். ஆனால் மறுநாள் மகாபாரதத் தொடர் ஆரம்பித்த போது, "டீவியில் நம்மை ஏமாற்றுகிறார்கள் அப்பா. இதால் அடித்தால் யாராவது கீழே விழுவார்களா? அல்லது இதால் அடித்து யாரையாவது கொல்ல முடியுமா?" என்று போட்டானே ஒரு போடு!

— அம்சா ஜி. வெங்கடேசன், புதுக்கோட்டை.

## லெஹர் லெஹரால் என்ன பிரயோசனம்?

○○ சமீபத்தில் சித்ரஹார் பகுதியில் மனோஜ்குமாரின் 'கிளர்க்' படத்திலிருந்து தேச பக்தியையும் ஒருமைப்பாட்டையும் வலியுறுத்தும் பாடலை ஒளிபரப்பினார் கள். அதில் தேசத் தலைவர்கள் வரிசை யில் காந்தி, நேதாஜி, திலகர், படேல் தொடங்கி இந்திரா காந்தி, ராஜீவ் காந்தி வரை காட்டினார்கள். மறந்து போய் கூட நம் தென்னாட்டுத் தலைவர்கள் யாருமே இல்லை. பாரதி, வ.உ.சி., ராஜாஜி, பெரியார், காமராஜர் இவர்களெல்லாம் சுதந்திரத்திற்காகப் போராடியவர்கள் இல் லையா? அல்லது இவர்களை வட நாட்டார் யாரும் மதிக்கத் தயாரில்லையா? நம்ம ஊர்ப் படங்களில் தேசபக்திப் பாடல்கள் எனில் எத்தனை வட நாட்டுத் தலைவர் களைக் காட்டுவதை வழக்கமாய் வைத்திருக் கிறோம்! இந்திப் படத் தயாரிப்பாளர் களுக்கு இந்த ஒருமைப்பாட்டு உணர்வு இல்லா விட்டால் போகட்டும். அரசு இலாக் காவான தூர்தர்ஷன் இத்தகைய பாடல் காட்சிகளை ஒளிபரப்பும் முன் யோசிக்க வேண்டாமா?

— எஸ். டி. சுந்தரி, பெங்களூர் — 16.

## இசை விழாவும், குரங்குகளும்

○○ அண்மையில், பம்பாய் எலிஃபண்டா குகையில் ஓர் இசை, நாட்டிய விழா நடந் தது. மின்சாரம், ரோடு வசதி, தண்ணீர் வசதி முதலியன இல்லாத அந்தத் தீவுக் குகையில் மிக்க சிரமத்துடன் விழா நடத்தப் பட்டது. சுற்றுலாத் துறை இயக்குனர் மேத்தா இது விஷயமாக டீ.வி.யில் பேட்டி அளித்த போது, சிரமங்களுக்கெல்லாம் பெரிய சிரமமாக ஒன்றைக் குறிப்பிட்டார்: அத் தீவிலுள்ள நூற்றுக்கணக்கான குரங்கு கள் மின் விளக்குகளின் சுவிட்சுகளைப் போட்டு, அணைக்கக் கற்றுக் கொண்டு விட்டன! ஒரு விளையாட்டாக அவை விளக்குகளைப் போட்டும் அணைத்தும் தொல்லை கொடுக்க, அதிகாரிகள் குரங்கு களோடு போராட வேண்டியிருந்தது!

— ராஜீவி நரசிம்மன், பம்பாய்.

## சக்தியின் ரகசியம்!

○○ சமீபத்தில் திருச்சியிலிருக்கும் என் அக்கா விட்டிற்குப் போன போது அவர்கள் வீட்டு டீ.வி.யில் நிகழ்ச்சிகள் முன்பை விடத் தெளிவாகத் தெரிந்ததைக் கண்டு காரணம் கேட்டேன். அதற்கு அக்காவின் பத்து வயதுப் பையன் விஜய் கூறிய பதில்: 'பூஸ்டர் இஸ் தி ஸீக்ரெட் ஆஃப் அவர் டீ.வி'ஸ் எனர்ஜி!

— இரா. இராகவன், மேல்மங்கலம்.

மருமகளைப் பிரசவத்திற்கு அட்மிட் செய்து விட்டுக் காத்திருக்கும் தம்பதி-

எனக்குப் பேரன்தான் வேணும்!

இல்லை.. எனக்குப் பேத்திதான் வேணும்!

?

# பேரனா, பேத்தியா?

கதை: பி. ஆர். பார்த்தசாரதி.
படம்: ஜெ...









# "தலைவர் பதவியிலிருந்து விலக்கப்பட்டது ஏன்?"

## —மூப்பனார் சிறப்புப் பேட்டி

**கேள்வி:** கடந்த தமிழகப் பொதுத் தேர்தலின் போது, பிரதமரே உங்களைக் 'காமராஜின் வாரிசு' என்று பிரகடனப் படுத்தினார். அப்படிப்பட்ட உங்களைத் திடீரென்று இப்போது தமிழக காங்கிரஸ் தலைவர் பதவியிலிருந்து நீக்க வேண்டிய அவசியமென்ன?

மூப்பனார்: ஒருவர் ஒரே சமயத்தில் இரண்டு பதவிகள் வகிக்கக் கூடாது என்பது கட்சியின் கொள்கையாக இருக்கிறது. அது தான் காரணம். நான் தற்போது சட்டமன்ற காங்கிரஸ் கட்சித் தலைவனாக இருக்கிறேன்.

கேள்வி: உங்களைத் தமிழக காங்கிரஸ் கட்சித் தலைவர் பதவியிலிருந்து விலக்கியதால் உங்கள் ஆதரவாளர்கள் கட்சிக்குள் எதிர்ப்புத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்களே?

மூப்பனார்: வந்திருக்கிற புதிய தலைவர், ஒரு சார்பாக இல்லாமல் அனைவரையும் சமமாக நடத்துவார் என்கிற நம்பிக்கை வந்துவிட்டால் எந்தப் பிரச்னையும் இருக்காது. அந்த நம்பிக்கை வரச் சிறிது தாமதமாகலாம். அவ்வளவு தான்!



கேள்வி: நீங்கள் உங்கள் ஆதரவாளர்களுக்கு ஒற்றுமையாகச் செயல்படுங்கள் என்று வேண்டுகோள் விடுத்திருந்தாலும் கூட, திரை மறைவில் எதிர்ப்பை ஊக்குவிக்கிறீர்கள் என்று சந்தேகப்படும்படியல்லவா, உங்கள் ஆதரவாளர்கள் மீண்டும் மீண்டும் எதிர்ப்பறிக்கைகளை விட்டுக் கொண்டிருக்கிறார்கள்!

மூப்பனார்: (பலமாகச் சிரிக்கிறார்) நீங்களே நன்றாகச் சந்தேகப்படுகிறீர்களே... (தொடர்ந்து சிரிக்கிறார்) நான் முன்பே சொன்னபடி புதிய தலைவர் அனைத்து மட்டங்களிலும் ஒரு நம்பிக்கையை உருவாக்கி விட்டால் ஒரு பிரச்னையும் இருக்காது.

கேள்வி: தி. மு. க. என்றால் அதன் தலைவர் கருணாநிதியை முன்னிறுத்தி வோட்டுக் கேட்கிறார்கள். ஜெ. அணியினர் ஜெயலலிதாவை முன்னிறுத்தி வோட்டுக் கேட்கிறார்கள். ஆனால் தமிழக காங்கிரஸில் அப்படி நிலையான தலைவர் இல்லாமல் இருப்பது கட்சிக்கு ஒரு பலவீனமில்லையா?

மூப்பனார்: காங்கிரஸ் என்பது தமிழக எல்லைகளிலேயே முடிந்து போகிற கட்சியல்ல. ஓர் அகில இந்தியக் கட்சி. அதனால் நாம் அகில இந்தியத் தலைவரை முன்னிறுத்தித்தான் வோட்டுக் கேட்க வேண்டும்.

கேள்வி: ராஜீவ் காந்தி என்கிற அகில இந்தியத் தலைவர் தமிழகத் தேர்தல் பிரசாரத்திற்காகப் பத்து முறைக்கு மேல் வந்து பிரச்சாரம் செய்தும் காங்கிரஸால் வெற்றி பெற முடியவில்லையே!

மூப்பனார்: உங்கள் கேள்விக்கு உங்கள் கல்கி பத்திரிகையில் வெளியான தலையங்கத்தை மேற்கோள் காட்டுவதே சரியான பதிலாக இருக்குமென்று கருதுகிறேன். நீங்களே, தேர்தல் முடிவுகளுக்குப் பிறகு, 'போட்ட முதல் காங்கிஸ"க்கு வீணாகி விடாது; அது பாராளுமன்றத் தேர்தலில் பலன் கொடுக்கும்' என்று சொல்லியிருக்கிறீர்களே! அது பிரதமருக்குக் கிடைத்த வெற்றிதானே!

கேள்வி: காங்கிரஸ் கணிசமான அளவுக்கு தமிழகத்தில் முன்னேறியிருக்கிறது என்பது சாதாரணத் தொண்டர்கள் அளவுக்குப் பெரிய வெற்றியாக இருக்கலாம்.



உங்கள் கேள்விக்கு உங்கள் கல்கி பத்திரிகையில் வெளியான தலையங்கத்தை மேற்கோள் காட்டுவதே சரியான பதிலாக இருக்குமென்று கருதுகிறேன்......



ஆனால், ஒரு பிரதமர் அளவுக்கு இந்த முன்னேற்றம் போதுமானதாக இல்லை என்று கூறலாமா?

மூப்பனார்: நீங்கள் ஒரு விஷயத்தைக் கவனத்தில் கொள்ள வேண்டும். பத்துப் பதினைந்து ஆண்டுகளாகப் படுத்தே கிடந்த ஒருவனைத் திடீரென்று எடுத்து நிறுத்திப் பந்தயத்தில் ஓட விட்டால் எந்த அளவுக்கு ஓடுவான்? அதுபோல்தான் காங்கிரஸும். இதுவே கணிசமான வெற்றிதான் என்பதில் சந்தேகமேயில்லை.

கேள்வி: சரி, நீங்கள் முதன் முதலாகச் சட்டசபைக்குச் சென்றிருக்கிறீர்கள். முதல் நாள் அனுபவம் எப்படியிருந்தது?

மூப்பனார்: ரொம்பவும் சந்தோஷமாக இருந்தது. சட்டசபைக் கூட்டத் தொடரின் ஆரம்பமும் அற்புதமாக இருந்தது. துரதிருஷ்ட வசமாக அந்த வேண்டாத – கசப்பான சம்பவங்கள் நடைபெறாமல் இருந்திருந்தால் ரொம்ப நன்றாக இருந்திருக்கும்.

கேள்வி: அன்று நடந்த சட்டசபைக் கலாட்டா என்பது சிலரால் திட்டமிட்டுச் செய்யப்பட்டதாக நீங்கள் கருதுகிறீர்களா?

மூப்பனார்: அப்படிக் கருத முடியவில்லை. திடீரென்று நடந்ததாகத்தான் தோன்றுகிறது. ஆயினும், சட்டசபைச் சம்பவங்களுக்கு எப்போதுமே ஆளுங்கட்சிக்குத்தான் பொறுப்பு அதிகம் என்பதால், தி.மு.க.வினர் ஜாக்கிரதையாக நடந்து கொண்டிருக்க வேண்டும் என்பதே எனது கருத்து.

கேள்வி: நீங்கள் சட்ட சபையில் பிறருடைய கவனத்தை ஈர்க்கும் வண்ணம் ஏதும் பேசவில்லையே?

மூப்பனார்: இந்த அனுபவம் எனக்குப் புதிது. இனிமேல் போகப் போகத்தான் நீங்கள் பார்க்க வேண்டும்.

கேள்வி: தொகுதிப் பக்கம் சென்றீர்களா?

மூப்பனார்: ஒரு முறை சென்று வந்தேன். எனக்கு வோட்டுப் போட்ட மக்களும் 'இவன் தொகுதிப் பக்கம் அடிக்கடி வர மாட்டான். ஆயினும் குறைகளைத் தீர்த்து விடுவான்' என்ற நம்பிக்கையில்தான் வோட்டுப் போட்டிருக்கிறார்கள். நானும் அந்த நம்பிக்கை பொய்த்துப் போகாதபடி, பாபநாசத்தில் ஓர் அலுவலகத்தைத் திறந்திருக்கிறேன். அதில் என் சார்பில் பலர்

சென்று குறைகளைக் கேட்கிறார்கள். ஆவன செய்து கொண்டிருக்கிறார்கள். நான் போகாததால் எந்தப் பிரச்னையும் தீர்க்கப் படாமல் இருக்காது.

கேள்வி: தி.மு.க. ஆட்சிப் பொறுப் பேற்று நான்கு மாதங்களுக்கு மேல் ஆகின் றன. அதன் செயல்பாடுகள் குறித்து நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?

மூப்பனார்: பல காரியங்களைச் செய்ய வேண்டுமென்று நினைக்கிறார்கள், செய் கிறார்கள். செய்ய முடிந்த காரியங்களைத் தங்களின் சாதனையாகச் சொல்லிக் கொள் கிறார்கள். செய்ய முடியாதவற்றுக்கு மத்திய அரசுதான் காரணம் என்று எல்லா எதிர்க் கட்சி மாநில முதல்வர்களும் சொல்வது போல் இங்கும் சொல்கிறார்கள்.

கேள்வி: காவிரி நதிநீர்ப் பிரச்னையை எடுத்துக் கொள்வோம். நீங்கள் தஞ்சாவூர்க் காரர். காவிரி தஞ்சாவூருக்கு எத்தனை அவ சியமானது என்பதை உங்களுக்குச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. நீங்களும் அகில இந்திய அளவில் காங்கிரஸின் பொதுச் செயலாளர் பொறுப்பெல்லாம் வகித்திருக் கிறீர்கள். காங்கிரஸுக்கு மத்தியில் அசைக்க முடியாத மெஜாரிட்டியும் இருக்கிறது. இந்த நிலையில், நதிகளைத் தேசியமயமாக்கு வதில் தீவிரம் காட்டாதது ஏன்?

மூப்பனார்: நமக்குக் கர்நாடகத்திலிருந்து முடிந்தவரை அதிக அளவு தண்ணீர் பெற விருப்பம். அவர்களுக்கோ முடிந்தவரை குறைவாகக் கொடுக்க விருப்பம். இதற்குக் காரணம் உள்ளூர் அரசியல்தான். வேறு ஒன்றுமில்லை. நதிகளைத் தேசிய மயமாக்கு வதென்று நீங்கள் சொல்வது பயனுள்ள விஷயம்தான். எதிர்காலத்தில் அது பற்றி நிச்சயம் தீவிரமாக ஆராயப்படும்.

கேள்வி: பாராளுமன்றத் தேர்தல் சமீபத் தில் வரவிருக்கிறது. அதில்...

மூப்பனார்: (குறுக்கிடுகிறார்) அதற்கும் உங்கள் கல்கி தலையங்கத்தைத்தான் குறிப் பிட விரும்புகிறேன். அதில், சட்டமன்றத் தேர்தலில் மக்கள் காங்கிரஸைப் பற்றி என்ன அபிப்ராயம் கொண்டிருந்தாலும் பாராளுமன்றத் தேர்தலில் காங்கிரஸை ஆதரிக்கும் உணர்வுதான் மக்களிடம் இருப் பதாகக் குறிப்பிட்டிருக்கிறீர்கள், அதை நான் முழுமையாக நம்புகிறேன்.

கேள்வி: கர்நாடகத்தில் தமது பலத்தைச் சட்டசபையில் நிரூபிப்பதற்கு ஒரு வாய்ப் பைக் கூடத் தராமல் பொம்மை அரசைக் கவிழ்த்திருக்கிறீர்கள்.... அதெல்லாம் காங்கி ரஸை ஆதரிப்பது பற்றி மக்களை மறு சிந்தனை செய்யச் சொல்லுமே?

மூப்பனார்: நாங்கள் எங்கே கவிழ்த் தோம்? அது அவர்களாகவே செய்து கொண்டதுதானே! உண்மையைச் சொல்லு கிறேன்... அன்று ஓர் எம்.எல்.ஏ.யின் விலை இருபது லட்சம் ரூபாய் தெரியுமா? பேரம் பேசினார்கள்.....

கேள்வி: பொம்மை அரசுதான் பேரம் பேசியிருக்கும் என்பதில்லையே! காங்கிர ஸும் அதே போல் பேரம் பேசியிருக்கலா மல்லவா?

மூப்பனார்: எங்களுக்கு அது மாதிரி யான வழிகளில் ஆட்சியைப் பிடிக்கும் ஆசை இல்லை!

கேள்வி: ஆட்சியைப் பிடிக்கும் ஆசை யில்லாமல் இருக்கலாம். ஆனால் கவிழ்க் கும் ஆசை இருக்கிறது.....

மூப்பனார்: அதில் என்ன லாபம் எங் களுக்கு? நான் கர்நாடகத்திலுள்ள பலரிட மும் பேசிப் பார்த்தேன். அவர்களில் யாருக் கும் பொம்மை அரசைக் காங்கிரஸ் அநியா யமாகக் கவிழ்த்து விட்டதாகத் துளியுணர் வும் இல்லை. மாறாக பொம்மை அரசு இத்தனை நாட்கள் தாக்குப் பிடித்ததற்குத் தான் ஆச்சரியம் காட்டுகிறார்கள். காங் கிரஸ் எதிர்ப் பொன்றையே வேதமாகக் கொண்டிருக்கும் இந்தியன் எக்ஸ்பிரஸ் கூட கர்நாடகத்தில் ஜனாதிபதி ஆட்சியைப் பிர கடனப் படுத்தியது சரி என்று தலையங்கம் எழுதியிருக்கும் போது, வேறென்ன வேண் டும்!

கேள்வி: வரப் போகிற பாராளுமன்றத்

---

## அன்றைய கவர்னரின் நகைச்சுவை!

தமிழ்நாடு கவர்னராக இருந்த ஸ்ரீபிரகாசா கோவை ரோட்டரி சங்கத்தின் சார்பில் நடைபெற்ற ஒரு விழாவுக்குத் தலைமை தாங்க வந்திருந்தார். அன்று ரோட்டரி காரியதரிசி, நீண்டதான ஆண்டு அறிக் கையை நிதானமாகப் படித்துக் கொண்டே போனார். ஸ்ரீபிரகாசா பொறுமை இழந்தவர் போல் காணப்பட்டார். எனவே ரோட்டரி தலைவர், "ஆண்டு அறிக்கை முழுதும் படிக்கப்பட்டு விட்டதாகக் கருது மாறு அவையோரைக் கேட்டுக் கொள்ளட்டுமா?" என்று ஸ்ரீபிரகாசா விடம் அனுமதி கோரினார். "ஓ! பேஷாக அப்படிச் செய்யுங்கள். ஆனால், இதையடுத்து உள்ள விருந்தும் உண்டு முடிக்கப்பட்டு விட்ட தாகக் கருதுமாறு கேட்டுக் கொண்டு விடாதீர்கள்!" என்று ஸ்ரீபிரகாசா குறிப்பிட அரங்கம் சிரிப்பில் அதிர்ந்தது!

ஆதாரம்: ஹிந்து

தகவல்: வெள்ளக்கால் இரா. கந்தையா.

தேர்தலில் ஜெயலலிதா கட்சியோடு நீங்கள் கூட்டுச் சேர நேர்ந்தால், உங்கள் மனோ நிலை எப்படியிருக்கும்?

மூப்பனார்: கூட்டு உண்டா இல்லையா என்பது பற்றி இன்னும் மேலிடத்தில் எந்த விதமான முடிவும் எடுக்கவில்லை. இந்த நிலையில் உங்களின் அனுமானங்களுக்கு எப்படி நான் பதில் சொல்ல முடியும்?

கேள்வி: வாழப்பாடி ராமமூர்த்தி தமிழக காங்கிரஸ் தலைவராகப் பதவியேற்றவுடன் ஜெயலலிதாவைச் சந்தித்தார். அப்போது எடுத்தபடம் எப்படியிருந்தது? ஜெயலலிதாவின் கம்பீரமான தோற்றமும் இவர் பவ்வியமாகக் குனிந்து நின்ற பாங்கும் எதை உணர்த்தியது? அது கூட்டுச் சேரும் ஆசையை உணர்த்தவில்லையா?

மூப்பனார்: உங்கள் கண்ணோட்டம் வேறு மாதிரியிருந்தால் நான் என்ன செய்ய முடியும்? (சிரிக்கிறார்) பொதுவாக நமது பண்பாடு என்பது, பெண்களிடம் ஆண்கள் அதிகமான மரியாதை காட்டுவதுதான். அந்த வகையில்தான் அவர் அப்படி நடந்து கொண்டிருக்கிறார். இப்படி நான் சொல்லுவது எடுபடாது என்றாலும் கூட நான் அப்படித்தான் உறுதியாக நம்புகிறேன்.

கேள்வி: இப்போது தமிழக காங்கிரஸுக்குள் இருக்கும் குழப்பமான சூழ்நிலை சரியாகிவிடும் என்று நம்புகிறீர்களா?

மூப்பனார்: நிச்சயமாக. பாராளுமன்றத் தேர்தல் விரைவில் வரப்போகிறது. அதில் காங்கிரஸ் வெற்றி பெற வேண்டும்; மீண்டும் பிரதமராக ராஜீவ் அவர்களே வரவேண்டும் என்பதில் கட்சிக்குள் யாருக்கும் கருத்து மாறுபாடே இல்லை. எனவே, அனைவரும் விரைவில் ஒன்று சேர்ந்து செயலாற்றுவார்கள் என்பதிலும் சந்தேகமில்லை.

கேள்வி: இத்தனை ஊழல் குற்றச் சாட்டுகளுக்கு மத்தியிலும் மீண்டும் காங்கிரஸ் ஆட்சிக்கு வந்துவிடும் என்று நம்புகிறீர்களா?

மூப்பனார்: ஆதாரபூர்வமாக எந்த ஊழல் குற்றச் சாட்டை நிரூபித்திருக்கிறார்கள்? தினந்தோறும் சேற்றை வாரி இறைப்பதுதான் எதிர்க்கட்சியின் வேலையாக் இருக்கிறதே தவிர, வேறில்லை. பிரமாதமாகச் சொல்லப்பட்ட போஃபர்ஸ் விஷயம் கூட இப்போது எதிர்க்கட்சிகளால் மறக்கப் பட்டு விட்டது. சொல்லப் போனால் அதுவொரு செத்துப்போன விஷயமாகி விட்டது!

கேள்வி: இப்போது சபாநாயகரே பகம்புல் வளர்க்கும் இயந்திர ஊழலில் மாட்டிக் கொண்டிருக்கிறார்!

மூப்பனார்: பல்ராம் ஜாக்கரை எனக்கு மிக நன்றாகத் தெரியும். அவர் விவசாயத்தில் மிகுந்த ஈடுபாடு உடையவர். அதன் வளர்ச்சி பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பவர். அந்த வகையில் தான் அவர் அந்த இயந்திரம் விஷயத்தில் சிபாரிசு செய்திருக்கிறார். ஆனால் அதில் நடந்ததாகக் கூறப்படும் ஊழல் குற்றச் சாட்டில் அவர் எள்ளளவும் சம்பந்தப்பட்டிருக்க மாட்டார் என்பதில் துளியும் சந்தேகமில்லை. அப்படியொரு ஊழல் நடந்திருந்தாலும், விவசாய வளர்ச்சியில் அவருக்கிருக்கும் ஆர்வத்தைப் பயன்படுத்தி, வேறு யாராவது செய்ததாகத் தான் இருக்குமே தவிர, நிச்சயம் அவர் அதில் சம்பந்தப்பட்டிருக்கவே மாட்டார்.

கேள்வி: கடைசியாக ஒன்று. சமீபத்தில் தமிழக சட்டசபையில் நடந்த விரும்பத்தகாத நிகழ்ச்சி மற்றும் உங்களைத் தமிழக காங்கிரஸ் தலைவர் பதவியிலிருந்து நீக்கியது என்று ஒட்டு மொத்தமாகப் பார்க்கும்போது, பேசாமல் அகில இந்தியக் காங்கிரஸ் பொதுச் செயலாளராக டெல்லியிலேயே இருந்திருக்கலாமோ என்று தோன்றியிருக்கிறதா?

மூப்பனார்: அப்படியொரு எண்ணமே வரவில்லை. எந்த இடத்தில் கட்சிப் பணி செய்யச் சொன்னாலும் செய்ய வேண்டியது நமது கடமை. அந்த வகையில் எனது சொந்த மாநிலத்திலேயே கட்சிப் பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்ததில் மகிழ்ச்சியே. எனக்கு எதிலும் ஒருசிறிதும் வருத்தமில்லை!

பேட்டி: **இளங்கோவன்**

வண்ணப்படமும், படமும்: **யோகா**

## கலர் டீ.வி. பரிசு—நீங்களா விருக்கிறதா?

வாராவாரம் கல்கியில் வெளியாகும் டீ. வி. வீடியோ பக்கங்களுக்கு டீ. வி. அல்லது வீடியோ தொடர்பான சிரிப்பூட்டும் அனுபவங்களையோ, விமர்சனங்களையோ எழுதலாம். எழுதுவது ரத்தினச் சுருக்கமாக இருக்க வேண்டும்; வாய்விட்டுச் சிரிக்க வைக்க வேண்டும். நீங்கள் அனுப்பும் துணுக்கு அல்லது விமர்சனத்துக்கு மேற்புறம் மிக அண்மையில் வெளியான கல்கி இதழின் தலையங்கப் பக்கத்திலுள்ள தேதிப் பகுதியான மூன்று வரிகளை மட்டும் கத்திரித்து ஒட்ட வேண்டும்.

பிரசுரமானால் ரூ. 25 பரிசு. பிரசுரமாகும் அனைத்துக்கும் வரிசை எண் தரப்பட்டு, இன்னும் மூன்று மாதங்களுக்குப் பிறகு குலுக்கல் முறையில் ஒருவருக்குக் கலர் டீ. வி. பரிசு! உடனடியாக எழுதியனுப்புங்கள்!

—ஆசிரியர்.

# கறையான் புற்று

## மணிராஜ்

அந்தப் பெண் — வயது இருபதுக்குமேல் இருக்காது — அழுது அழுது கண்கள் சிவந்திருந்தாள். முகத்தில் கள்ளமோ, கபடமோ இல்லை. அவள் பெயரைக் கோர்ட் குமாஸ்தா வாசித்தபோது ஒரு பெரிய விம்மல் அவள் தொண்டையிலிருந்து வெடித்தது.

எழும்பூர் கோர்ட் ஒன்றில் வேலை பார்க்கும் என் நண்பன் மௌலியைப் பார்த்து வரலாமென்று போனேன். அவனுடன் பேசிவிட்டு வெளியே வந்த போதுதான் அவளைச் சந்தித்தேன்.

நான் கோர்ட் வாசற்படிகளைத் தாண்டிக் கொண்டிருந்த போது ஒரு போலீஸ் வான் வந்து நின்றது. அதிலிருந்து ஆறு பெண்கள் — இன்னும் சில ஆண்கள் இறக்கப்பட்டனர்.

அந்தப் பெண்கள் — ஒருத்தியைத் தவிர — ஏதோ கல்யாணத்தில் கலந்து கொள்ள வந்தவர்கள் போல் — கூட்டி வந்த போலீஸ்காரர்களுடன் சிரித்துச் சிரித்து ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அந்த ஒருத்தி மட்டும் குனிந்த தலை நிமிராமல் — ஒரு வார்த்தை கூடப் பேசாமல் — தனியாகத் தெரிந்தாள்.

யதேச்சையாகத் தலை நிமிர்ந்தவளின் விழிகளை என் கண்கள் சந்தித்த போது அவற்றில் ஒரு மிரட்சி, பயம், வெகுளித்தனம் எல்லாம் எனக்குத் தெரிந்தன.

நான் பேசாமல் என் வழியைப் பார்த்துக் கொண்டு போயிருக்கலாம். ஆனால் விதி யாரை விட்டது? அவளை எதற்கு இங்கே கூட்டி வந்திருக்கிறார்கள்? இன்னும் கொஞ்ச நேரத்தில் கோர்ட்டில் விசாரிப்பார்கள். அவர்கள் பின்னாலேயே போய் அந்த நீதிமன்றக் கூட்டத்தின் கடைசி பெஞ்சில் உட்கார்ந்தேன்.

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அவர்கள் முறை வந்தது. கூண்டில் அத்தனை பேரும் நிற்க வசதி இல்லை. ஆகவே எல்லோரையும் கைகளைக் கட்டியபடி ஓர் ஓரமாக நிற்க வைத்திருந்தார்கள்.

அவர்கள் மேல் சாட்டப்பட்ட குற்றம் படிக்கப்பட்டது. அத்தனை பேரும் மறுக்காமல் தலை அசைத்துக் குற்றத்தை ஒப்புக் கொள்ள, இவள் மட்டும் ஏதோ பேச முற்பட்டு, அருகிலிருந்த போலீஸ்காரர் முறைத்ததைக் கண்டு அடங்கிப் போனாள்.

ஒரு லாட்ஜ் ஒன்றில் போலீஸார் திடீர்ச் சோதனை நடத்திய போது பிடிபட்ட இரவு ராணிகள் இவர்கள். அடிக்கடி இங்கு வந்து பழக்கப்பட்டவர்கள் —

இந்தப் பெண் அப்படிப்பட்டவள் என நம்ப என் மனம் மறுத்தது. நீதிபதி அவர்களுக்கு அபராதம் விதித்தார். கட்டத் தவறினால் சிறை வாசம். யாரோ ஒருவன் — அவன் உடையையும் முகத்தையும் பார்த்தாலே பேட்டை ரௌடி எனச் சொல்லி விடலாம் — அவர்களுக்காக அபராதப் பணத்தைக் கட்ட முன்வந்தான். அவனைக் கண்ட அவள் மிரண்டு பயந்து போனாள். அருகிலிருந்த போலீஸ்காரரிடம் நடுங்கியபடி ஏதோ சொன்னாள்.

அவள் அபராதம் கட்டவில்லை. மாறாக — சிறைக்கு — மகளிருக்காக ஏற்பட்ட உஷார் விடுதிக்குப் போக — அவள் சம்மதித்திருந்தாள். அவள் பயத்தின் காரணம் எனக்குப் புரிந்தது. அபராதம் கட்ட முன் வந்தவன் என்ன ஊருக்கு உபகாரியா? இல்லை... அந்தப் பணத்தைப் போல் பல மடங்கு அவளை வைத்துச் சம்பாதிக்கப் பார்ப்பான்.

மாலையில் தனியாக வந்த ஒரு ஜீப் இவளை மட்டும் உஷார் விடுதிக்கு



அழைத்துப் போயிற்று.

என் நண்பன் மௌலியிடம் அந்தப் பெண்ணைப் பற்றி விசாரித்தேன். என்னால் அந்தப் பெண்ணின் முகத்தை மறக்க முடியவில்லை. மூழ்கிக் கொண்டிருக்கும்

என்னைக் கைதாங்கிக் கரை சேர்க்க யாரும் முன் வரமாட்டீர்களா எனக் கெஞ்சுவது போல் தெரிந்தது.

"இவர்கள் முகத்தையெல்லாம் பார்த்து எடை போடக் கூடாது... எல்லாமே மோச மானவர்கள்... இன்னும் இரண்டு மாதங் களில் வந்து பார்... மறுபடியும் இங்கே வந்து நிற்பாள்... நீயே வெறுத்து ஒதுக்குவாய்..."

"இல்லை மௌலி... எனக்கு என்னவோ இவள் வித்தியாசமாகத் தெரிகிறாள். அவளை நான் ஒரு முறை சந்தித்துப் பேச ஏற்பாடு செய்ய முடியுமா?"

மௌலி முதலில் மறுக்கத்தான் செய் தான். பின்னர் நான் தொடர்ந்து வற்புறுத் தியதன் பேரில் அதற்கு ஏற்பாடு செய்வதாக உறுதியளித்தான்.

மறுநாள் நானும் அவனுமாக அவளை அந்த உஷார் விடுதியில் சந்திக்கப் போனோம்.

எங்களைக் கண்டதும் அவள் பயப்பட் டாள்.

"பயப்படாதே... நான் நேற்று உன்னைக் கோர்ட்டில் பார்த்தேன். நீ தப்புச் செய்திருப் பாய் என என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. என்னை நம்பி உன்னைப் பற்றிய எல்லா விவரங்களையும் சொல்லலாம். நிச்சயம் என்னால் முடிந்த உதவி செய்யக் காத்திருக்கிறேன்..." என் றேன்.

அவள் வாயைத் திறக்கவில்லை. விடுதித் தலைவி அவளைச் சாந்தப்படுத்திப் பேச வைத்தாள்.

அவள் பெயர் சகுந்தலா. கோர்ட்டில் சரளா எனச் சொல்லியிருந்தாள். மதுராந் தகம் பக்கத்தில் ஒரு கிராமத்தைச் சேர்ந்த வள். எஸ்.எஸ்.எல்.சி. வரை படித்திருந்தாள். கூடப் பிறந்தவர்கள் நான்கு பேர். இவள் தான் மூத்தவள். தந்தையின் வருமானம் போதவில்லை. ஏதாவது வேலை கிடைத்து இருநூறு, முந்நூறு கிடைத்தால் போதும் என்ற நிலையில் இருந்த போது ஒரு வாய்ப்பு நாடி வந்தது.

மதுராந்தகத்தில் பகல் காட்சி சினிமா பார்க்கப் போன போதுதான் அந்தப் பெண்ணைச் சந்தித்தாள். பார்க்கவும் பழகவும் நல்லவளாகத் தெரிந்தாள். தான் சென்னையில் ஒரு ரெடிமேட் ஆடை தயாரிக்கும் நிறுவனத்தில் பணிபுரிவதாகச் சொன்னாள். வேலைக்கு ஆள் தேவைப் படுகிறதாம். சுமாராகத் தையல் தெரிந்தால் போதும். ஆரம்பத்தில் மாதம் முந்நூறு ரூபாய். நன்றாக வேலை செய்தால் ஆயிரம் ரூபாய் வரை கூடச் சம்பாதிக்க வழி இருப்பதாகச் சொன்னாள். பெண்கள்தான் அதிகம் வேலை செய்வதாகவும் அங்கேயே தங்கிக் கொள்ள வசதி இருப்பதாகவும் கூறி னாள்.

சகுந்தலா கணக்குப் போட்டாள். அவள் நன்றாகத் தைப்பாள். நிச்சயம் ஐந்நூறு ரூபாயாவது சம்பாதிக்க முடியும். சாப் பாட்டுச் செலவு போக, மாதம் இருநூறு ரூபாய் ஊருக்கு அனுப்பினால் அவர் களுக்கு அரிசி வாங்கப் போதாதா?

சகுந்தலா அந்தப் பெண்ணைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போனாள். அவள் தாயார் சம்மதிக்கவில்லை. முன் பணமாக ஐந்நூறு ரூபாய் தர அந்தப் பெண் முன் வந்த போது கொஞ்சம் சபலம் தட்டியது.

சகுந்தலா சென்னை வந்தாள். அந்த வீட்டு வாசலில் 'ரெடிமேட் துணி விற்பனை நிலையம்' எனத்தான் போட்டிருந்தது. உள்ளே நுழைந்த பிறகுதான் அந்த அவலம் புரிந்தது. திரும்பிப் போக வழி இல்லை. காலையில் அபராதப் பணம் கட்ட வந்தவன்தான் 'முதலாளி'. அவனைக் கூட்டி வந்த பசப்புக்காரி அவன் கையாள்.

அழுது பிடிவாதம் பிடித்துப் பலன் இல்லாமல் போயிற்று. சென்னைக்கு வந்த ஒரே வாரத்தில் அவள் பலமுறை சீரழிந் தாயிற்று. கடைசியில் அன்று அந்த லாட்ஜில் போலீஸில் பிடிபட்டு...

அவளால் மேலே பேச முடியவில்லை. விம்மி விம்மி அழுதாள்.

"நடந்தது நடந்தாகி விட்டது. நீ ஒழுங் காக இருப்பதாக எழுதிக் கொடுத்தால் ஒரு மாதத்தில் வெளியே அனுப்புவதாக இவர்கள் கூறுகிறார்கள். என்ன சொல் கிறாய்?" எனக் கேட்டேன்.

அவள் சம்மதித்தாள்.

ஒரு மாதம் கழித்து —

சகுந்தலாவை மௌலியின் வீட்டில் தங்க வைத்தேன். மௌலியின் மனைவி நல்ல பெண். சகுந்தலாவைப் பற்றித் தெரிந்திருந் தும் கூட முகம் சுளிக்கவில்லை. கூடப் பிறந்தவளைப் போல் பிரியத்துடன் பார்த் துக் கொண்டாள்.

பிறகு என் சொந்த ஊரான மதுரைக் குத் திரும்பி அருகிலுள்ள நூற்பு ஆலையில் சகுந்தலாவை வரவழைத்து வேலைக்கு அமர்த்தினேன். பெண்கள் தங்கும் விடுதியில் ஓர் இடமும் வாங்கிக் கொடுத்தேன்.

ஞாயிற்றுக்கிழமை, மற்றும் இதர விடு முறை நாட்களில் நான் அவளைப் போய்ப் பார்த்து வந்தேன். அந்தச் சந்திப்புகள் என் மனத்தில் ஓர் எண்ணத்தை விதைத்தது. 'நான் ஏன் இவளை என் வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொள்ளக் கூடாது!'

இதுபற்றி நான் அவளிடம் பேச்சு எடுத்த போது அவள் திடமாக மறுத்தாள். "எனக்கு நீங்கள் எத்தனையோ செய்திருக்கிறீர்கள். என் தோலை உங்கள் காலுக்குச் செருப் பாக்கிப் போட்டால் கூடப் போதாது. உங்கள் மனைவியாக இருக்க எனக்கு அரு கதை இல்லை... அந்த உன்னதமான ஸ்தா னத்தில் நான் உட்கார்ந்து மாசு படுத்த மாட் டேன்" எனப் பிடிவாதமாகப் பேசினாள்.

அடிமேல் அடி வைத்ததில் அம்மியும் நகர்ந்தது. என் யோசனைக்கு எப்படியோ அவள் வாயிலிருந்து சம்மதத்தை வரவ ழைத்து விட்டேன்.

எங்கள் திருமண யோசனையை மௌலி கொஞ்சமும் வரவேற்கவில்லை. "இதெல்

லாம் கேட்கவும் படிக்கவும்தான் நன்றாக இருக்கும். நடைமுறைக்கு ஒத்து வராது'' எனச் சொன்னான்.

''உணர்ச்சி வேகத்தில் எந்த முடிவையும் எடுத்து விடாதே. பிடிக்காவிட்டால் கழற்றி எறிந்துவிடக் கூடிய சட்டை இல்லை. பிற்காலத்தில் வருத்தப்பட்டு உங்கள் வாழ்க்கையை நாசமாக்கிக் கொள்ளாதீர்கள்.'' எனப் புத்தி சொன்னான். ஆயினும் நான் பிடிவாதமாக மறுமாதமே முகூர்த்தத் தேதியை நிச்சயித்தேன்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. அவளைச் சந்திக்க வழக்கம் போல் ஹாஸ்டலுக்குப் போனேன். அவள் இல்லை.

சனிக்கிழமை இரவு எட்டு மணிக்குக் கணவன், மனைவி இருவர் வந்து கூட்டிப் போனதாகச் சொன்னார்கள். ரொம்ப நேரம் தர்க்கத்திற்குப் பிறகுதான் சகுந்தலா புறப்பட்டதாகக் கூடச் சொன்னார்கள். என்ன விலாசம் என்று அவளால் சொல்ல முடியவில்லை.

சகுந்தலா ஞாயிறன்றும் திரும்பவில்லை. திங்களன்றும் போய் விசாரித்தேன். அவள் இல்லை. அவள் பணிபுரிந்த ஆலைக்கு டெலிபோன் செய்தால்— அவள் ஒரு வாரம் லீவு எடுத்திருப்பதாகச் சொன்னார்கள்.

என்னிடம் சொல்லாமல் கொள்ளாமல் எங்கே போயிருப்பாள்? யார் வந்து கூட்டிச் சென்றிருப்பார்கள்? மறுபடியும் நான் எங்கே போய்த் தேடுவேன்?

அடுத்து வந்த ஞாயிற்றுக்கிழமை— ஹாஸ்டலில் சகுந்தலா இருந்தாள்.

வழக்கம் போல் நாங்கள் வெளியே புறப்பட்டோம்.

''சகுந்தலா நீ எங்கே போயிருந்தாய்? என்னிடம் கூடச் சொல்லவில்லை...''

''ஓர் அவசர வேலை... தட்ட முடியவில்லை.''

''என்னவோ ஏதோ என்று பயந்து போனேன். உன் வீட்டிற்குக் கூடப் போய் விசாரித்தேன்... அப்படி அவசரமாக எங்கே போனாய்?''

''மனத்தில் நிம்மதியில்லை. எங்கேயோ போனேன். விடுங்களேன்... வழக்கமாகப் போவது போல் இன்றைக்கும் முதலில் கோவில்தானே?''

''போகலாம்... போகலாம்... ஒரு வாரம் நீ இல்லாமல்...''

அதுதான் திரும்பி வந்து விட்டேனே... இனிமேல் உங்களிடம் சொல்லாமல் எங்கேயும் போக மாட்டேன். ஆமாம். இந்தச் சட்டையை நீங்கள் போட்டுக் கொண்டு இதுவரை நான் பார்த்ததேயில்லையே... புதிதாக வாங்கினீர்களா?''

''பேச்சை மாற்றாதே... நீ எங்கே போயிருந்தாய், சொல்லேன்...''

''என்ன நீங்கள் குழந்தை மாதிரி கேட்டதையே திருப்பித் திருப்பிக் கேட்டுக் கொண்டு... இதைப் பற்றி வெளியே மூச்சு விடக் கூடாது என்று எனக்குக் கட்டளை... இல்லாவிட்டால் உங்களிடம் சொல்லாமல்

இருப்பேனா...? ரொம்பவும் நெருங்கியவர்கள்... என் சொந்த விஷயம்...

''என்னிடமே சொல்லக் கூடாத அப்படி என்ன அது? '' என்று கோபத்துடன் கேட்டேன்.

''என் மேல் உங்களுக்கு உண்மையான அக்கறை இருந்தால், தயவு செய்து அதைப் பற்றிக் கேட்காதீர்கள்.''

நான் என் முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டேன்.

''இதோ பார்... சகுந்தலா... என் பொறுமையை நீ ரொம்பவும் சோதிக்கிறாய். உன் பழைய காலத்தை மறந்து பேசுகிறாய்.''

அவள் பெரிதாகச் சிரித்தாள்.

''இதை நான் இன்னும் சீக்கிரமாகவே எதிர்பார்த்தேன்... எதையெல்லாம் நான் மறக்க வேண்டும் என்று நீங்கள் என்னிடம் படித்துப் படித்துச் சொன்னீர்களோ, அவற்றை உங்களால் மறக்க முடியவில்லை. என் மேல் நம்பிக்கையிருந்தால் இப்படியெல்லாம் பேச மாட்டீர்கள். தெருவில் அடிபட்டுக் கிடந்த நாயை எடுத்துக் கட்டிப் போட்டது போல் ஒரு விசுவாசத்தை மட்டும் என்னிடம் எதிர்பார்க்கிறீர்கள்... என்னையும் விருப்பு வெறுப்பு உள்ள மனிதப் பிறவியாக...''

''ஸ்டாப் இட்... உன்னிடம் நான் கொண்டுள்ள அபிமானத்தைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டுமானால் — வீணாகப் பிடிவாதம் பிடிக்காமல் — நீ எங்கே போயிருந்தாய் என்று சொல்...''

''மன்னித்து விடுங்கள்... இப்படி நீங்கள் இருப்பீர்கள் என நான் நினைக்கவில்லை. நடந்ததை நான் சொன்னால் கூட, நீங்கள் நம்புவீர்கள் என்று என்ன நிச்சயம்? ''

எனக்குக் கோபம் வந்தது.

''நீ பழைய சகுந்தலா இல்லை... நான் பார்த்துப் பழகிய சகுந்தலா இல்லை... நீ மாறி விட்டாய்... நாம் சேர்ந்து வாழ்வது என எடுத்த முடிவு சரிதானா என யோசிக்க வேண்டி இருக்கிறது'' என்றேன் படபடவென்று..

''யோசியுங்கள்... நன்றாக யோசியுங்கள்!'' எனச் சொன்னவள், என் பதிலுக்குக் காத்திராமல் திரும்பிப் போய் விட்டாள்.

ஆண்டவனே... கடைசி நிமிஷத்தில் என்னைக் காப்பாற்றி விட்டாய்... நாய் வாலை நிமிர்த்த முடியாது என்பதை நிதர்சனமாகக் காட்டி விட்டாளே? இந்தச் சகுந்தலாவுக்குத்தான் எத்தனை வேஷங்கள்? அன்று கோர்ட்டில் கண்ணீரும் கம்பலையுமாக... வீட்டில் பெற்றோருக்கு அடங்கிய மகளாக... என்னுடன் சுற்றிய போது உற்சாகம் கொப்புளிக்கும் காதலியாக... முடிவில் இப்படி மூர்க்கக் குணம் படைத்த ஓர் இதயமற்ற அரக்கியாக...

எதற்காக இந்த ஒளிவு மறைவு எல்லாம்? தப்பு ஏதோ நடந்திருக்கிறது... புதிய தொடர்பு ஏற்பட்டிருக்கிறது... பொய் சொல்லக் கூடத் துணிவு இல்லை... நான் அது உண்மையா இல்லையா என்று விசாரித்து விடுவேனோ என்கிற பயம்.

நடந்ததையெல்லாம் விவரித்து மௌலிக்குக் கடிதம் எழுதினேன். அவன் எச்சரிக்கைக்கு நான் செவி சாய்க்காமல் போனதற்காக வருத்தம் தெரிவித்தேன்.

இரண்டு நாட்களில் அவனிடமிருந்து பதில் வந்தது.

''......நீ சகுந்தலாவைப் பற்றித் தப்புக் கணக்குப் போட்டு விட்டாய். போன வாரம் அவளைப் பார்க்க வந்தது நானும் என் மனைவியும்தான். எங்களுடன் அவளைக் கட்டாயப்படுத்திக் கூட்டிப் போனோம். உன்னிடம் சொல்லாமல் வரமாட்டேன் என்றாள். நாங்கள்தான் வலுக்கட்டாயமாகக் கூட்டிப் போனோம். திருச்செந்தூர், கன்னியாகுமரி, திருவனந்தபுரம் எல்லாம் சுற்றினோம்... 'எங்கு போயிருந்தாய், யாருடன் போயிருந்தாய்? ' என்று நீ கேட்டால் ஒன்றுமே சொல்லக் கூடாது எனச் சத்தியம் வாங்கியிருந்தோம்.''

ஏன்? எதற்காக இந்தச் சத்தியம்? என்னிடம் சொன்னால் என்ன?

அவன் விவரமாக எழுதியிருந்தான்.

''நீ எங்களுக்கு வேண்டியவன்... அதே போல் சகுந்தலாவும் எங்களைக் கவர்ந்து விட்டாள். உங்கள் கல்யாணம் நல்லபடியாக அமையாது என்று நாங்கள் பயந்தோம்... உன் அடி மனத்தில் ஒரு சந்தேகப் புற்று இருக்கிறது... அதில் அழிக்க முடியாத கறையான்கள் இருக்கின்றன. நீ என்று இல்லை. அநேகமாக எல்லா ஆண்களும்— நான் உள்பட — அப்படித்தான்... நீ சகுந்தலாவை நேசித்ததைவிட — இப்படி ஒரு திருமணத்தால் உனக்குப் பெருமை சேரும் என்பதைத்தான் பெரிதும் விரும்பினாய். அவளை நீ நன்கு புரிந்து கொண்டிருந்தால்— அவள் எந்தத் தப்பும் செய்திருக்க மாட்டாள் என்று நம்பியிருப்பாய்... தூண்டித் துருவிக் கேட்டிருக்க மாட்டாய்... அவளிடம் உன்னால் நிர்மலமாக நடக்க முடியாது... ஏன், ஒரு விதவையை மணந்தவன் கூடச் சில சமயங்களில் ஏதேதோ நினைக்கிறான். சகுந்தலாவின் விஷயத்தில் — இன்னும் பக்குவப்பட்ட ஓர் ஆண் தேவை...''

''தியாகு... உனக்கு நான் ஒரு பரீட்சை வைத்தேன்... உங்கள் இருவர் நன்மைக்காக. நீ தோற்று விட்டாய்... சகுந்தலா வாழ்க்கையைக் கசப்பான வழியில் அனுபவித்து விட்டாள். எல்லாவற்றையும் மறப்பது அவளாலும் முடியாது. உன்னாலும் நிச்சயம் முடியாது என்பதை நீயே நிரூபித்து விட்டாய்...

''அந்த வைரம் தனியாகச் சுடர் விடட்டும்...

எனக்கு இது தேவைதான்... சரியான மூக்குடைப்பு... மறுபடியும் நான் சகுந்தலாவைத் தேடிக் கொண்டு போனேன்... நான் பித்தளை இல்லை, தங்கம்... அந்த வைரத்தை மேலும் மெருகூட்ட முடியும் என வலியுறுத்திச் சொல்ல...

சகுந்தலா — அன்று மட்டுமல்ல — என்றுமே என்னைச் சந்திக்க மறுத்து விட்டாள்.

# பொன்னியின் செல்வன்




## ஐந்தாம் அத்தியாயம்

## தாயைப் பிரிந்த கன்று

ளவரசர் புத்த பிக்ஷுவையும் தூக்கிக் கொண்டு முருகய்யன் கொண்டு வந்து நிறுத்திய படகிலே குதித்தார். அவர் குதித்த வேகத்தில் அந்தச் சிறிய படகு பேயாட்டம் ஆடியது. ஒரு கணம் கவிழ்ந்து விடும் போலவும் இருந்தது. முருகய்யன் மிகப் பிரயத்தனப்பட்டுப் படகு கவிழாமல் காப்பாற்றினான்.

"முருகய்யா! இனிமேல் படகை விடு! ஆனைமங்கலம் அரண்மனைக்கு விடு!" என்று பொன்னியின் செல்வர் உரத்த குரலில் கூவினார். அச்சமயம் உச்ச நிலையை அடைந்திருந்த புயற் காற்றும் புயலினால் பொங்கி வந்த கடலும் போட்ட இரைச்சலினால் அவர் கூறியது முருகய்யன் காதில் விழவில்லை. ஆயினும் இளவரசரின் முகத் தோற்றத்திலிருந்து அவருடைய விருப்பதை அறிந்து கொண்ட முருகய்யன் படகைச் செலுத்தத் தொடங்கினான். சூடாமணி விஹாரத்தின் முழுகிக் கொண்டிருந்த மண்டபச்சிகரங்களின் மீதும் புத்தர் சிலைகளின் மீதும் மோதாமல் படகைச் செலுத்துவது மிகவும் கடினமாயிருந்தது. முருகய்யன் பெரும் புயலிலும் சுழிக் காற்றிலும் நடுக்கடலில் படகு செலுத்திப் பழக்கப்பட்டவனாதலால் வெகு லாகவமாகச் செலுத்திக் கொண்டு போனான். அதைப் பார்த்து இளவரசர் வியந்தார். அவனுக்குச் சற்று உதவி செய்யலாம் என்று அவருக்குத் தோன்றியது. ஆனால் புத்த பிக்ஷுவைப் பிடித்திருந்த பிடியை விட்டு விடத் தயங்கினார். அதற்கு ஏற்றாற் போல், திடீரென்று பிக்ஷு இளவரசருடைய பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ளப் பிரயத்தனம் செய்தார். அச்சமயம் படகு புத்த பகவானின் சிலையின் அருகே போய்க் கொண்டிருந்தது. இப்போது கடல் வெள்ளம் அச் சிலையின் கண்கள் வரையில் ஏறியிருந்தது. இன்னும் சில நிமிடத்தில் சிலையே முழுகிவிடும் என்பதில் ஐயமில்லை.

இளவரசர் பிக்ஷுவை இறுகப் பிடித்துக் கொண்டார். பார்ப்பதற்கு மிக மென்மையான தேகம் உடையவராகக் காணப்பட்ட இளவரசரின் கரங்களில் எவ்வளவு வலிமை இருந்தது என்பதை அறிந்து பிக்ஷு வியந்தார் என்பதை அவருடைய முகத் தோற்றம் காட்டியது. நெஞ்சிலே உரம் இருந்தால், உடலிலும் வலிமை உண்டாகும் போலும்! இத்தனைக்கும் பல நாள் சுரத்தினால் மெலிந்திருந்த உடம்பு!

புத்தரின் சிலையைத் தாண்டிப் படகு போயிற்று. முழுகிக் கொண்டிருந்த அச்சிலையைப் பிக்ஷு பார்த்துக் கொண்டேயிருந்தார். சிலை விரைவில் மறைந்தது. பிக்ஷுவின் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் பெருகியது.

"இளவரசே! என்ன காரியம் செய்தீர்?" என்றார் பிக்ஷு. அவருடைய உதடுகளின் அசைவிலிருந்து என்ன சொல்கிறார் என்பதைத் தெரிந்து கொண்ட இளவரசர் பிக்ஷுவின் காதின் அருகில் குனிந்து "சுவாமி! அந்தக் கேள்வியை நான் அல்லவா கேட்க

அமரர் கல்கி

வேண்டும்? என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்?'' என்றார்.

''இளவரசே! இந்த விஹாரம் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னாலிருந்து இங்கே இருந்து வருகிறது. மகானாகிய தர்ம பாத முனிவரின் காலத்திலே கூட இருந்தது. வீர சைவர்களான பல்லவ சக்கரவர்த்திகள் இதை அழிக்காமல் விட்டு வைத்தார்கள். அப்படிப்பட்ட புராதன விஹாரம் என் காலத்தில், என் கண் முன்னால், முழுகி விட்டது. செங்கல் திருப்பணியினாலான இந்த விஹாரம் இந்தக் கடல் வெள்ளத்துக்குத் தப்ப முடியாது. வெள்ளம் வடிந்த பிறகு சில குட்டிச் சுவர்களே மிச்சமிருக்கும்! விஹாரம் போன பிறகு நான் மட்டும் எதற்காக உயிரோடு இருக்க வேண்டும்?'' என்றார் பிக்ஷு.

''விஹாரம் இடிந்து அழிந்தால் மறுபடியும் திருப்பணி செய்து கட்டிக் கொள்ளலாம். புத்த பகவானுடைய சித்தமிருந்தால் நானே திரும்பவும் கட்டிக் கொடுப்பேன். தாங்கள் போய்விட்டால் என்னால் தங்களைத் திருப்பிக் கொண்டு வர முடியாதே?'' என்றார் இளவரசர் அருள்மொழிவர்மர்.

கடலும் புயலும் சேர்ந்து போட்ட இரைச்சலினால் அவர்களால் மேலும் தொடர்ந்து விவாதம் செய்ய முடியவில்லை. மற்றும், சுற்றுப் புறங்களில் நாலா புறத்திலும் அவர்கள் கண்ட கோரக் காட்சிகள் அவர்களைப் பேச முடியாதபடி செய்து விட்டன.

முறிந்த பாய்மரங்களுடனே பெரிய பெரிய நாவாய்களும் சின்னஞ் சிறு மீன் பிடிக்கும் படகுகளும் கடற் பக்கத்திலிருந்து கரையை நோக்கி வந்து கொண்டிருந்தன. அவற்றில் பல கரை தட்டியும், கட்டடங்களின் மேல் மோதியும், பேயாட்டம் ஆடிய மரங்களின் மீது இடித்துக் கொண்டும், சுக்கு நூறாக நொறுங்கி விழுந்தன.

பெருங் காற்றில் வீடுகளின் கூரைகள் அப்படியே பிய்த்துக் கொண்டு பறந்து சென்று வெள்ளத்தில் விழுந்தன.

வேறு சில கூரைகள் மிதந்து கொண்டிருந்தன. அவற்றில் சிலவற்றில் மனிதர்கள் மிகுந்த சிரமத்துடன் தொத்திக் கொண்டிருந்தார்கள். ஓவென்று அவர்கள் ஓலமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

பெரிய பெரிய மரங்கள் காற்றில் முறிந்து விழுந்தன. முறிந்த மரங்களில் சில மிதந்து மிதந்து சென்றன. மிதந்த மரங்களைப் பிடித்துக் கொண்டு சில மனிதர்கள் உயிர் தப்ப முயன்றார்கள்.

ஆடுமாடுகள் வெள்ளத்தில் அலறிக் கொண்டு மிதந்து சென்றன.

இத்தகைய கோரமான காட்சிகளைப் பார்த்துப் பார்த்து இளவரசரும் பிக்ஷுவும் மனங் கசிந்தார்கள். அந்த நிலைமையில் தங்களால் ஒன்றும் உதவி செய்ய முடியவில்லையே என்ற எண்ணம் அவர்களுடைய வேதனையை அதிகப்படுத்தியது.

முருகய்யன் அப்பால் இப்பால் பார்க்காமல் படகைச் சர்வ ஜாக்கிரதையாகச் செலுத்திக் கொண்டு சென்றான்.

சூடாமணி விஹாரம் நாகைப்பட்டினத்தில் கடற்கரை யோரமாக இருந்தது. அங்கிருந்து கால்வாய் சிறிது தூரம் வரையில் தெற்குத் திசையை நோக்கிச் சென்றது. பிறகு தென் மேற்காக அரைக் காதம் வரையில் சென்று, அங்கிருந்து மீண்டும் திரும்பித் தென் திசையில் நேராகச் சென்றது. இந்த இரண்டாவது திருப்பத்தின் முனையிலேதான் ஆனைமங்கலம் அரண்மனை இருந்தது.

வழி நடுவில் இருந்த நந்தி மண்டபத்தின் அருகில் படகு வந்தபோது, நந்தி முழுதும் முழுகியிருந்தது மட்டுமல்லாமல் மேல் மண்டபத்தின் விளிம்பைத் தொட்டுக் கொண்டு வெள்ளம் சென்றது. மண்டபத்துக்கு அப்பால் நாலாபுறமும் பரவி இருந்த தென்னந் தோப்புகளில் முக்கால் வாசி மரங்கள் காற்றினால் முறிந்து விழுந்து விட்டன. மிஞ்சியிருந்த மரங்களின் உச்சியில் மட்டைகள் ஆடியது தலைவிரி கோலமாகப் பேய்கள் ஆடுவது போலவே இருந்தது. அவற்றில் சில மட்டைகள் காற்றினால் பிய்க்கப் பட்டு வெகு தூரத்துக்கு அப்பால் சென்று விழுந்தன.

நந்தி மண்டபத்தின் உச்சியில் தாயைப் பிரிந்த கன்றுக்குட்டி ஒன்று எப்படியோ வந்து தொத்திக் கொண்டிருந்தது. அது நாலா புறமும் பார்த்துப் பார்த்து மிரண்டு விழித்தது. உடம்பை அடிக்கடி சிலிர்த்துக் கொண்டது. அதன் கால்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. அந்தக் கன்று 'அம்மா' என்று எழுப்பிய ஈனக் குரல் படகில் சென்று கொண்டிருந்தவர்களின் காதில் இலேசாக விழுந்தது. ''ஐயோ பாவம்! தாயைப் பிரிந்த இந்தக் கன்றின் கதி என்ன ஆகுமோ!'' என்று இளவரசர் எண்ணிய அதே சமயத்தில், ஒரு பெரிய தென்னை மரம் திடீரென்று முறிந்து மண்டபத்தின் பின் புறத்தில் விழுந்தது. சிறிது முன் பக்கமாக விழுந்திருந்தால் கன்றுக் குட்டியின் மேலேயே அது விழுந்திருக்கும்.

மரம் விழுந்த வேகத்தினால் தண்ணீரில் ஒரு பெரிய அலை கிளம்பி மண்டபத்தின் மேலே தாவி வந்தது. முன்னமே நடுங்கிக் கொண்டிருந்த கன்றுக் குட்டி அந்த அலையைச் சமாளிக்க முடியாமல் தடுமாறி விழுந்தது. மண்டபத்தின் உச்சியிலிருந்து அலையினால் அது வெள்ளத்தில் உந்தித் தள்ளப் பட்டுத் தத்தளித்தது.

இளவரசர் இதுவரையில் புத்த பிக்ஷுவைத் தம் கரங்களினால் பிடித்துக் கொண்டிருந்தார். கன்றுக் குட்டி மண்டபத்தின் உச்சியிலிருந்து உந்தித் தள்ளப் பட்டதைப் பார்த்ததும், 'ஆகா' என்று சத்தமிட்டுப் பிக்ஷுவைப் பிடித்துக் கொண்டிருந்த

பிடியை விட்டார். பிக்ஷு அக்கணமே வெள்ளத்தில் குதித்தார்.

படகோட்டி முருகய்யன் துடுப்பைப் படகில் போட்டு விட்டு இளவரசரைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். அவனை இளவரசர் கடுங் கோபத்துடன் பார்த்து விட்டு ''விடு!'' என்று கையை உதறினார். அதற்குள் பிக்ஷு இரண்டு எட்டில் நீந்திச் சென்று கன்றுக் குட்டியின் முன்னங்கால்கள் இரண்டையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். கன்றுக் குட்டியும் உயிர்மீதுள்ள இயற்கையான ஆசையினால் தலையை மட்டும் தண்ணீருக்குமேலே வைத்துக்கொண்டிருக்கப் பிரயத்தனப் பட்டது. பிக்ஷு கன்றுக் குட்டியைப் பிடித்து இழுத்துக் கொண்டு படகை நோக்கி வந்தார். இளவரசர் அவருக்குக் கை கொடுத்து உதவினார். இருவருமாகச் சேர்ந்து முதலில் கன்றுக் குட்டியைப் படகில் ஏற்றினார்கள். பின்னர், இளவரசரின் உதவியினால் ஆச்சாரிய பிக்ஷுவும் படகில் ஏறிக் கொண்டார்.

இத்தனை நேரம் எப்படியோ சமாளித்துக் கொண்டிருந்த கன்றுக்குட்டி, படகு ஒரு ஆட்டம் ஆடியதும், கால் தடுமாறித் தொப்பென்று விழுந்தது. நல்ல வேளையாக, படகின் உட்புறத்திலே தான் விழுந்தது. பிக்ஷு அதன் அருகில் உட்கார்ந்தார். கன்றின் தலையைத் தன் மடிமீது எடுத்து வைத்துக் கொண்டு அதைத் தடவிக் கொடுக்கத் தொடங்கினார்.

''குருதேவரே! சற்று முன்னால் சூடாமணி விஹாரத்தில் புத்த பகவானின் சரணங்களைப் பிடித்துக்கொண்டு பிராணத் தியாகம் செய்யப் பார்த்தீர்களே? அப்படித் தாங்கள் செய்திருந்தால், இந்த வாயில்லா ஜீவனை இப்போது காப்பாற்றியிருக்க முடியுமா?'' என்று இளவரசர் கேட்டார்.

''ஐயா! நான் செய்ய இருந்த குற்றத்தைச் செய்யாமல் தடுத்தீர்கள். அதற்காக நன்றி உடையேன்! ஆம்; இந்தக் கன்றின் உயிரைக் காப்பாற்றியது என் மனத்துக்கு நிம்மதி அளிக்கிறது. சூடாமணி விஹாரம் இடிந்து தகர்ந்து போய் விட்டால் கூட இனி அவ்வளவு கவலைப் படமாட்டேன்'' என்றார் பிக்ஷு.

''ஆச்சாரியரே! ஒரு கன்றின் உயிரைக் காப்பாற்றியதனாலே எப்படி மன நிம்மதி பெறுகிறீர்கள்? இன்று இந்தப் புயலினால் எவ்வளவு ஜீவன்கள் எவ்வளவு கஷ்டப்படுகின்றன? எவ்வளவு ஆயிரக் கணக்கான மக்கள், — ஆண்கள், பெண்கள், குழந்தைகள், வயோதிகர்கள் — கஷ்டப்படுவார்கள்? எத்தனை வாயில்லா ஜீவன்கள், ஆடுமாடுகள், குதிரைகள், பறவைகள் — உயிரை இழக்க நேரிடும்? இந்தத் துன்பங்களுக்கெல்லாம் பரிகாரம் என்ன?'' என்று கேட்டார் இளவரசர்.

''ஐயா! நம்மால் இயன்றதைத்தான் நாம் செய்யலாம், அதற்கு மேல் நாம் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. இயற்கை உற்பாதங்களைத் தடுக்கும் சக்தி நமக்கு இல்லை.



புயற்காற்றை நாம் கட்டுப்படுத்த முடியுமா? பெரு மழையைத் தடுக்க முடியுமா? அல்லது மழை பெய்யும்படி செய்யத்தான் முடியுமா? கடல் பொங்கி வரும் போது அதை நாம் தடுத்து நிறுத்தி விட முடியுமா? ஆகா! கடல்களுக்கு அப்பால் உள்ள ஜீழத் தேசங்களில் எரிமலை நெருப்பைக் கக்குவதையும் பூகம்பம் நேர்ந்து பூமி பிளப்பதையும் நான் பார்த்திருக்கிறேன். அவற்றுக்கெல்லாம் நாம் என்ன செய்யலாம்? நம் கண் முன்னால் கஷ்டப்பட்டுத் தவிக்கும் ஜீவனுக்கு உதவி செய்யத்தான் நம்மால் முடியும்!''

''குருதேவரே! இயற்கை உற்பாதங்கள் ஏன் உண்டாகின்றன? புயற் காற்றும் பூகம்பமும் ஏன் நிகழ்கின்றன? கொள்ளை நோய்கள் ஏன் வருகின்றன? அவற்றினால் மக்களும் மற்றப் பிராணிகளும் அடையும் துன்பங்களுக்குப் பொறுப்பாளி யார்? நம்மால் இயற்கையின் உற்பாதங்களைத் தடுக்க முடியாது. ஆனால் கடவுளால் கூட முடியாதா? கடவுள் ஏன் இத்தகைய இயற்கை உற்பாதங்களைத் தடுக்காமல் ஜீவராசிகள் இவற்றினால் கஷ்டப்படுவதைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்?'' என்று இளவரசர் கேட்டார்.

''பொன்னியின் செல்வ! தாங்கள் இப்போது கேட்ட கேள்விக்கு ஆதிகாலம் முதல் மகான்களும் முனிவர்களும் விடை சொல்ல முயன்றிருக்கிறார்கள். ஆனால் அவை எல்லாருக்கும் திருப்தி அளிப்பதாக இல்லை. ஆகையினாலேயே புத்தபகவான் கடவுளைப் பற்றி ஏதும் சொல்லவில்லை. கடவுளைப் பற்றிய ஆராய்ச்சியிலேயே இறங்கவில்லை. 'பிறருக்கு உதவி செய்யுங்கள். பிறருடைய கஷ்டங்களைப் போக்க முயலுங்கள். அந்த முயற்சியிலே தான் உண்மையான ஆனந்தம் அடைவீர்கள். அதிலிருந்து சுக துக்கங்களைக் கடந்த நிர்வாண நிலையை அடைவீர்கள்!' என்று புத்த பகவான் போதித்தார்.'' என்று பிக்ஷு கூறினார்.

படகு நந்தி மண்டபத்திலிருந்து மேற்குத் திசையில் திரும்பி ஆனைமங்கலத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

பொன்னியின் செல்வரின் உள்ளம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. சற்று முன் பிக்ஷு வெளியிட்ட புத்த சமயக் கொள்கையோடு தமது முன்னோர்களின் சமயக் கொள்கையை அவர் மனத்துக்குள்ளே ஒப்பிட்டுப் பார்த்தார். பிறருக்கு உதவி செய்யும் கடமையைச் சைவ வைஷ்ணவ சமயங்களும் வற்புறுத்துகின்றன. 'பரோபகாரம் இதம் சரீரம்' என்ற மகா வாக்கியமும் இருக்கிறது. ஆனால் அதே சமயத்தில் கடவுளிடம் நம்பிக்கை வைத்துப் பக்தி செய்யும் கடமையையும் நம் முன்னோர் வற்புறுத்தியிருக்கிறார்கள். கடவு

ளைச் சம்ஹார மூர்த்தியான ருத்திரனாகவும் கருணாமூர்த்தியான மகாவிஷ்ணுவாகவும் உருவங் கொடுத்துப் போற்றியிருக்கிறார்கள். கடவுளுக்கு ஜகன்மாதா உருவம் கொடுத்து, ஒரே சமயத்தில் அன்பே வடிவான உமாதேவியாகவும் கோர பயங்கர துர்க்கா பரமேசுவரியாகவும் வர்ணித்துத் தோத்திரம் செய்திருக்கிறார்கள். இந்தக் கொள்கைகளில் எது உண்மை? உலகத்தின் அன்னை கோர பயங்கர ரணபத்திர காளியாக இருக்க முடியுமா? ஏன் இருக்க முடியாது? பெற்ற குழந்தையை ஒரு சமயம் தாயார் அன்புடன் கட்டித் தழுவிக் கொஞ்சுகிறான். இன்னொரு சமயம் கோபித்துக் கொண்டு அடிக்கவும் செய்கிறாள். ஏன் அடிக்கிறான் என்பது சில சமயம் குழந்தைக்குப் புரிவதில்லை. ஆனால் அடிக்கும் தாயாருக்குத் தான் பெற்ற குழந்தையிடம் அன்பு இல்லை என்று சொல்ல முடியுமா...?

இருட்டுகிற சமயத்தில் படகு ஆனைமங்கலத்திலிருந்த சோழ மாளிகையை அணுகியது. பொங்கி வந்த கடல் அந்த மாளிகையை எட்டவில்லையென்பதைப் படகில் வந்தவர்கள் கண்டார்கள். அரண்மனைக்கருகில் அமைத்திருந்த அலங்காரப் படித்துறையில் கொண்டு போய் முருகய்யன் படகை நிறுத்தினான்.

அதுவரைக்கும் இயற்கையும் படகில் சென்றவர்களிடம் ஓரளவு கருணை செய்தது. பெரும் புயல் அடித்துக் கடல் பொங்கி வந்தாலும் பெருமழை மட்டும் பெய்யத் தொடங்கவில்லை, சிறு தூற்றலோடு நின்றிருந்தது.

படகு அரண்மனை ஓரத்தில் வந்து நின்ற பிறகுதான் பெருமழை பிடித்துக் கொண்டு பெய்ய ஆரம்பித்தது.



ஆனைமங்கலத்து அரண்மனைக் காவலன் அரண்மனையின் முன் வாசலில் கையில் ஒரு தீவர்த்தியைப் பிடித்துக் கொண்டு நின்றான். சுற்றுப் புறங்களிலிருந்து அன்றிரவு அடைக்கலம் புகுவதற்காக ஓடி வந்திருந்த ஜனங்களோடு அவன் பேசிக் கொண்டிருந்தான்.

படகு ஒன்று வந்து படித்துறையில் நின்றதைக் கண்டதும் காவலன் தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்தான். பொன்னியின் செல்வரின் திருமுகம் அவன் கண்ணில் பட்டது. உடனே மற்றதையெல்லாம் மறந்து விட்டுப் படித்துறையை நோக்கி ஓட்டமாக ஓடினான்.

இதற்குள் படகிலிருந்து இளவரசரும் ஆச்சாரிய பிக்ஷுவும் படிக்கட்டில் இறங்கினார்கள். கன்றை மெள்ளப் பிடித்துக் கரையில் இறக்கி விட்டார்கள்.

காவலன் இளவரசரின் காலில் விழப் போனான். அவர் அவனைப் பிடித்துத் தடுத்தார். காவலன் கையிலிருந்து தீவர்த்தி கால்வாயில் விழுந்து ஒரு கணம் சுடர் விட்டு எரிந்து விட்டு மறைந்தது.

''இளவரசே! சூடாமணி விஹாரத்தைப் பற்றி நானே கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். தாங்கள் இங்கே வந்து விட்டது மிகவும் நல்லதாய்ப் போயிற்று'' என்றான் காவலன்.

''நான் சூடாமணி விஹாரத்தில் இருப்பது உனக்குத் தெரியுமா?''

''தெரியும், ஐயா! இளையபிராட்டியும் கொடும்பாளூர் இளவரசியும் வந்திருந்த போது தெரிந்து கொண்டேன். யாரிடமும் சொல்ல வேண்டாம் என்று இளையபிராட்டி பணித்து விட்டுச் சென்றார்....''

''அதை இன்னமும் நீ நிறைவேற்றத்தான் வேண்டும். மாளிகை வாசலில் கூடியிருப்பவர்கள் யார்?''

கடற்கரை யோரத்துக் கிராமங்களில் கடல் புகுந்து விட்டதால் ஓடி வந்தவர்கள். இரவு தங்குவதற்கு இடம் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களை விரட்டி விடுகிறேன்....''

''வேண்டாம்! வேண்டாம்! அவர்கள் எல்லாருக்கும் இருக்கவும் படுக்கவும் இடங்



கொடு. ஆனால் என்னைப் பற்றி அவர்களிடம் சொல்ல வேண்டாம்! உன் திவர்த்தி கால்வாயில் விழுந்து அணைந்ததும் நல்லதாய்ப் போயிற்று. எங்களை வேறு வழியாக அரண்மனை மேன்மாடத்துக்கு அழைத்துக் கொண்டு போ!" என்றார் இளவரசர்.

அவர்கள் அரண்மனைக்குள் பிரவேசித்ததும் புயற் காற்றோடு பெருமழையும் சேர்ந்து 'சோ' என்று கொட்டத் தொடங்கியதும் சரியாயிருந்தன.

## ஆறாம் அத்தியாயம்

## முருகய்யன் அழுதான்!

தஞ்சை நகருக்கு அருகில், மந்தாகினி ஏறியிருந்த பல்லக்கின் பின்னால் மரம் முறிந்து விழுந்த அதே தினத்தில், வீரநாராயண ஏரியில் காற்று அடித்துக் கரையோரமிருந்த படகு நகர்ந்துபோன அதே நேரத்தில், நாகைப் பட்டினத்தில் நிகழ்ந்த சம்பவங்களையே சென்ற அத்தியாயங்களில் கூறினோம் என்பதை நேயர்கள் அறிந்திருப்பார்கள்.

அன்றிரவு முழுதும் நாகைப்பட்டினமும் அதன் சுற்றுப் புறங்களும் ஒரே அல்லோல கல்லோலமாக இருந்தன. அவரவர்களும் உயிர் பிழைத்திருந்தால் போதும் என்ற நிலைமையில் ஒருவருக் கொருவர் உதவி செய்து கொள்வதும் இயலாத காரியமாயிருந்தது. ஆயினும் புத்த பிக்ஷுக்கள் நாகைப் பட்டினத்தின் வீதிகளில் அலைந்து ஜனங்களுக்கு இயன்றவரை உதவி புரிந்து வந்தார்கள்.

அதே இரவில் ஆச்சாரிய பிக்ஷுவும் பொன்னியின் செல்வரும் ஆனை மங்கலம் சோழ மாளிகைக்குள் வெகு நேரம் கண் விழித்திருந்து பேசிக் கொண்டிருந்தார்கள். இந்தக் கடும் புயலினால் கடல் பொங்கியதால் கடற்கரை யோரத்து மக்கள் எவ்வளவு கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாவார்கள் என்பதைப் பற்றிப் பேசிக் கவலைப்பட்டார்கள்.

அரண்மனை மணியக்காரனை இளவரசர் அழைத்து அரண்மனைக் களஞ்சியங்களில் தானியம் எவ்வளவு இருக்கிறது என்றும், பொக்கிஷத்தில் பணம் எவ்வளவு இருக்கிறது என்றும் விசாரித்தார். களஞ்சியங்கள் நிறையத் தானியம் இருந்தது என்று தெரிந்தது. திருநாகைக் காரோணத்தில், நீலாயதாட்சி அம்மனின் ஆலயத்தைப் புதுப்பித்துக் கருங்கல் திருப்பணி செய்வதற்காகச் செம்பியன் மாதேவி அனுப்பி வைத்த பொற் காசுகள் பன்னிரண்டு செப்புக் குடங்கள் நிறைய இருப்பதாகவும் தெரிந்தது.

"குருதேவரே! புத்த பகவானுடைய சித்தத்துக்கு உகந்த கைங்கரியத்தைத் தாங்கள் செய்வதற்கு வேண்டிய வசதிகள் இருக்கின்றன. அரண்மனைக் களஞ்சியங்களில் உள்ள தானியம் முழுவதையும் ஏழைகளுக்கு உணவளிப்பதில் செலவிடுங்கள். செப்புக் குடங்களில் உள்ள பொற் காசுகள் அவ்வளவையும் வீடு இழந்தவர்களுக்கு விநியோகம் செய்யுங்கள்!" என்றார் இளவரசர் பொன்னியின் செல்வர்.

"அது எப்படி நியாயம் ஆகும்? தானியத்தையாவது விநியோகிக்கலாம். தங்கள் பெரிய பாட்டியார், செம்பியன் மாதேவியார், ஆலயத் திருப்பணிக்காக அனுப்பியுள்ள பணத்தை வேறு காரியத்துக்காகச் செலவு செய்யலாமா? அந்த மூதாட்டி வருத்தப்பட மாட்டாரா?" என்றார் ஆச்சாரிய பிக்ஷு.

"ஆச்சாரியரே! என் பெரிய பாட்டியாருக்கு நான் சமாதானம் சொல்லிக் கொள்ளுவேன். இப்போழுது இந்தப் பணத்தை ஏழை எளியவர்களின் துயரத்தைத் துடைப்பதற்காகச் செலவு செய்வேன். வருங்காலத்தில் என் பாட்டியாரின் உள்ளம் மகிழ்ந்து பூரிக்கும் படி இந்தச் சோழ நாடெங்கும் நூறு நூறு சிவாலயங்களை எழுப்பிக் கொடுப்பேன், பெரிய பெரிய கோபுரங்களை அமைப்பேன். இந்தமாதிரி கடல் பொங்கி வந்தாலும் முழுக அடிக்க முடியாத உயரமுள்ள ஸ்தூபிகளை எழுப்புவேன். தஞ்சைமா நகரில் தக்ஷிண மேரு என்று சொல்லும்படி விண்ணை அளாவும் உயரம் பொருந்திய கோபுரத்துடன் பெரியதொரு கோயிலைக் கட்டுவேன். ஐயா! இன்று முழுகிப்போன சூடாமணி விஹாரம் மண்ணோடு மண்ணாய்ப் போனாலும் கவலைப்பட வேண்டாம். அதற்கு அருகாமையில் கருங் கல்லினால் திருப்பணி செய்து பிரளயம் வந்தாலும் அசைக்க முடியாத மற்றொரு பெரிய சூடாமணி விஹாரத்தை எழுப்பிக் கொடுப்பேன்!" என்று இளவரசர் ஆவேசம் ததும்பக் கூறினார்.

"பொன்னியின் செல்வ! வருங் காலத்தைப் பற்றித் தாங்கள் இத்தனை உற்சாகத்துடன் பேசுவது எனக்கு மிக்க மகிழ்ச்சி தருகிறது!" என்றார் பிக்ஷு.

"ஆம், ஆம்! இந்த உலகில் நான் ஜீவித்திருந்து ஏதோ பெரிய காரியங்கள் செய்ய வேண்டுமென்பது இறைவனுடைய சித்தம். ஆகையினாலேயே என் உயிருக்கு நேர்ந்த எத்தனையோ அபாயங்களிலிருந்து என்னைக் காப்பாற்றியிருக்கிறார். இன்றைக்குக் கூடப் பாருங்கள், இந்த முருகய்யன் எப்படியோ நல்ல சமயத்தில் வந்து சேர்ந்தான். இல்லாவிடில் தாங்களும் நானும் சூடாமணி விஹாரத்துக் குள்ளேயே இருந்திருப்போம். கடல் பொங்கி வந்து இவ்வளவு சீக்கிரத்

தில் விஹாரத்தை முழுக அடித்து விடும் என்று எண்ணியிருக்க மாட்டோம்....''

''அது உண்மைதான். ஐந்நூறு ஆண்டுகளாக நடவாத சம்பவம் இன்று பிற்பகலில் ஒரே முகூர்த்த நேரத்தில் நடந்து விடும் என்று யார் எதிர் பார்த்திருக்க முடியும்? கருணைக் கடலாகிய புத்த பகவான் பொங்கி வந்த கடலின் கோபத்திலிருந்து தங்களைக் காப்பாற்றினார். தங்கள் மூலம் என் அற்பமான உயிரையும் காத்தருளினார். தாங்கள் செய்ய உத்தேசிக்கும் காரியத்தை நான் பூரணமாக ஒத்துக் கொள்கிறேன். அரசாங்கப் பொக்கிஷத்திலிருந்து எடுத்துச் செலவு செய்தால் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையர் கோபங் கொள்வார். ஆலயத் திருப்பணிக்காக வைத்திருக்கும் பணத்தை வீடு வாசலிழந்த ஏழைகளுக்கு விநியோகிப்பதைக் குறித்துத் தங்கள் திருப்பாட்டியார் கோபித்துக் கொள்ள மாட்டார். அவ்விதம் தாங்கள் செய்வது உசிதமானது. ஆனால், இந்த மகத்தான புண்ணிய காரியத்தைத் தாங்களே முன்னின்று நடத்துவது அல்லவோ பொருத்தமாயிருக்கும்? இந்த ஏழைச் சந்நியாசி அவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்க முடியாது!......''

''குருதேவரே! நான் முன்னின்று நடத்தினால் என்னை வெளிப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படும். பாண்டவர்களின் அஞ்ஞாத வாசத்தைப் பற்றித் தாங்கள் கூறியது என் நெஞ்சில் பதிந்திருக்கிறது. நமது செந்தமிழ் நாட்டுப் பொய்யாமொழிப் புலவரின் வாக்கும் நினைவுக்கு வந்தது.

**''வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றுந்**
**தீமை இலாத சொலல்''**

என்றும்,

**''பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கு மெனின்''**

என்றும் தமிழ் மறை கூறுகிறதல்லவா? என்னை நான் இச் சமயம் ஜனங்களுக்கு வெளிப்படுத்திக் கொள்வதால் நாட்டில் குழப்பமும் கலகமும் விளையலாம் என்று அறிவிற் சிறந்த என் தமக்கையார் கருதுகிறார். நான் மறைந்திருப்பதனால் யாருக்கும் எத்தகைய தீமையும் இல்லை. ஆகையால் புயலின் கொடுமையினால் கஷ்டப்பட்டுத் தவிக்கும் மக்களுக்குத் தாங்கள் தான் அரண்மனையில் உள்ள பொருளைக் கொண்டு உதவி புரிய வேண்டும்'' என்றார் இளவரசர்.

''பொன்னியின் செல்வ! என் மனம் எதனாலோ மாறி விட்டது! தங்களை வெளியிட்டுக் கொண்டு மக்களுக்கு உதவி செய்ய இதுவே சரியான தருணம் என்று என் மனத்தில் உதித்திருக்கிறது. அதுவே புத்த பகவானுடைய சித்தம் என்று கருதுகிறேன்'' என்றார் பிக்ஷு.



ச் சமயம் யாரோ விம்மும் குரல் கேட்டு இருவரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். முருகய்யன் ஒரு மூலையில் உட்கார்ந்து முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு விம்மி விம்மி அழுது கொண்டிருந்தான். இளவரசர் அவனிடம் சென்று கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வந்தார்.

''முருகய்யா! இது என்ன? ஏன் அழுகிறாய்?'' என்று கேட்டார்.

''என் மனையாள்... என் மனையாள்...'' என்று தடுமாற்றத்துடன் கூறி முருகய்யன் மேலும் விம்மினான்.

''ஆமாம், ஆமாம்! உன் மனைவியை நாங்கள் அடியோடு மறந்து விட்டோம். அவள் இன்றிரவு புயலிலும் மழையிலும் என்ன ஆனாளோ என்று உனக்குக் கவலை இருப்பது இயல்புதான். ஆயினும் இந்த நள்ளிரவு நேரத்தில் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. பொழுது விடிந்ததும் உன் மனையாளைத் தேடிக் கண்டுபிடிக்கலாம்'' என்றார் இளவரசர்.

''ஐயா! அதற்காக நான் வருந்தவில்லை. அவளுக்கு ஆபத்து ஒன்றும் நேர்ந்திராது. இதைப் போல் எத்தனையோ பயங்கரமான புயலையும் வெள்ளத்தையும் அவள் சமாளித்திருக்கிறாள்!'' என்றான் முருகய்யன்.

''பின் எதற்காக அழுகிறாய்?'' என்று இளவரசர் கேட்டார்.

படகோட்டி தட்டுத் தடுமாறிப் பின்வரும் விவரங்களைக் கூறினான்:—

''அவளைப் பற்றி நான் என்னென்னமோ சந்தேகப்பட்டதை நினைத்து வருத்தப்படுகிறேன். அவள்தான் என்னை வற்புறுத்திக் கோடிக்கரையிலிருந்து இங்கே அழைத்துக் கொண்டு வந்தாள். தாங்கள் சூடாமணி விஹாரத்தில் இருக்கக்கூடும் என்று அவள்தான் சொன்னாள். அவளுடைய கட்டாயத்துக்காகவே நான் வந்தேன். தங்களுக்கு ஏதோ தீங்கு செய்ய நினைக்கிறாளோ என்று கூடப் பயந்தேன். அது எவ்வளவு பிசகு என்று இப்போது தெரிந்தது. சற்று முன்னால் தாங்கள் இந்தப் படகோட்டி ஏழையைக் குறித்துப் பாராட்டிப் பேசினீர்கள். கடவுள் என் மூலம் தங்கள் உயிரைக் காப்பாற்றியதாகக் கூறினீர்கள். ஆனால் என்னை இந்தக் காரியத்துக்குத் தூண்டியவள் என் மனையாள். அவளைப் பற்றிச் சந்தேகித்தோமே என்று நினைத்த போது என்னை மீறி அழுகை வந்து விட்டது!''

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த இளவரசர் பொன்னியின் செல்வரின் உள்ளத்தில் வேறொரு ஐயம் இப்போது உதித்தது.

''அப்பனே! உன் மனையாள் மிக்க உத்தமி. அவளைப் பற்றி நீ சந்தேகித்தது தவறுதான். ஆனால் அவளுக்கு நான் இங்கே இருப்பது எப்படித் தெரிந்தது?''

என்று கேட்டார்.

"என் அத்தையும் என் தங்கை பூங்குழலியும் நாகைப்பட்டினத்துக்குப் படகில் புறப்பட்டார்கள். அதிலிருந்து என் மனையாள் ஒருவாறு ஊகித்துத் தெரிந்து கொண்டாள்."

"எந்த அத்தை?" என்று இளவரசர் பரபரப்புடன் கேட்டார்.

"ஐயா! ஈழத் தீவில் தங்களைப் பல முறை அபாயங்களிலிருந்து காப்பாற்றிய ஊமை அத்தைதான்...."

"ஆகா! அவர்கள் இப்போது எங்கே? உன் அத்தையும் பூங்குழலியும் என்ன ஆனார்கள்? இங்கே புறப்பட்டு வந்தார்கள் என்று கூறினாயே?"

"ஆம்; புறப்பட்டு வந்தார்கள். ஆனால் அவர்கள் பிரயாணம் தடைப்பட்டு விட்டது!" என்று சொல்லி விட்டு மேலும் முருகய்யன் விம்மி விம்மி அழத் தொடங்கினான்.

பொன்னியின் செல்வர் மிக்க கவலை அடைந்து அவனைச் சமாதானப் படுத்தி விவரங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டார். ஈழத்து அரசியை யாரோ மூர்க்கர்கள் பலவந்தமாகப் பிடித்துக் கொண்டு போனதை அறிந்ததும் இளவரசருக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. அவர்களை ராக்கம்மாள் தடுக்கப் பார்த்தாள் என்றும், அதற்காக அவளை அடித்து மரத்தில் சேர்த்து வைத்துக் கட்டி விட்டுப் போனார்கள் என்றும் அறிந்த போது ராக்கம்மாளின் பேரில் ஏற்பட்டிருந்த ஐயம் நீங்கி விட்டது. இளவரசருக்கு அவள் பேரில் இப்பொழுது மதிப்பும் அபிமானமும் வளர்ந்தன.

"குருதேவரே! கேட்டீர்களா! இந்த உலகத்தில் நான் போற்றும் தெய்வம் ஒன்று உண்டு என்றால், ஈழத்தரசியாகிய மந்தாகினி தேவிதான். அந்த ஊமை மாதரசிக்கு எந்தவிதமான தீங்கும் செய்தவர்களை நான் மன்னிக்க முடியாது. பழுவேட்டரையர்கள் என்னைச் சிறைப்படுத்தக் கட்டளை பிறப்பித்தது குறித்து நான் சிறிதும் கோபம் கொள்ளவில்லை. ஆனால் ஊமை ராணிக்கு ஏதேனும் அவர்கள் தீங்கு செய்திருந்தால் ஒருநாளும் என்னால் பொறுக்க முடியாது. பழுவேட்டரையர் குலத்தை அடியோடு அழித்து விட்டு மறு காரியம் பார்ப்பேன். என்னைப் பெற்ற அன்னையும் என் சொந்தத் தந்தையும் ஈழத்து அரசிக்குத் தீங்கு செய்திருந்தாலும் அவர்களை என்னால் மன்னிக்க முடியாது. குருதேவரே! நாளைக்கே நான் தஞ்சாவூருக்குப் பிரயாணப்படப் போகிறேன். வியாபாரியைப் போல் வேடம் பூண்டு இந்தப் படகோட்டி முருகய்யனைத் துணைக்கு அழைத்துக் கொண்டு கிளம்பப் போகிறேன். ஈழத்தரசியைப் பற்றி அறிந்து கொண்டாலன்றி என் மனம் இனி நிம்மதி அடையாது. ஆச்சாரியரே! புயலினால் கஷ்டப்பட்டவர்களுக்கு உதவி செய்யும் கைங்கரியத்தைத் தாங்கள்தான் நடத்த வேண்டும். தங்கள் பெயரால் நடத்தப் பிரியப்படா விட்டால் 'ஈழத்து நாச்சியார் அறச்சாலை' என்று வைத்து நடத்துங்கள்! ஈழத்தரசி புத்த மதத்தில் பற்றுக் கொண்டவர் என்பது தங்களுக்குத் தெரியுமோ, என்னமோ? 'பூதத்தீவு' என்று மக்கள் அழைக்கும் போதத் தீவில் உள்ள புத்த பிக்ஷுணிகளின் மடத்திலேதான் அவர் சாதாரணமாக வசிப்பது வழக்கம்!" என்றார் இளவரசர்.

புத்த பிக்ஷுவும் இதற்கு மாறு சொல்லாமல் ஒப்புக் கொண்டார்.

மறுநாள் புயலின் உக்கிரம் தணிந்தது. பொங்கி வந்த கடலும் பின்வாங்கிச் சென்றது. ஆனால் அவற்றினால் ஏற்பட்ட நாசவேலைகள் வர்ணனைக்கு அப்பாற்பட்டிருந்தன. நாகைப்பட்டினம் நகரில் பாதி வீடுகளுக்கு மேல் கூரைகளை இழந்து குட்டிச்சுவர்களாக நின்றன. அந்த வீதிகளில் ஒன்றில் இளவரசர் அருள்மொழிவர்மர் மூட்டையைச் சுமந்து நடந்து கொண்டிருந்தார். அவர் பின்னால் முருகய்யன் இன்னும் ஒரு பெரிய மூட்டையைச் சுமந்து தொடர்ந்து போய்க் கொண்டிருந்தான். புயலினாலும் வெள்ளத்தினாலும் நேர்ந்திருந்த அல்லோல கல்லோலங்களைப் பார்த்துக் கொண்டு அவர்கள் போனார்கள்.

இடிந்த வீடு ஒன்றின் சுவரின் மறைவிலிருந்து ஒரு பெண் அவர்கள் வருவதைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். அவள் வேறு யாரும் இல்லை. முருகய்யனின் மனையாள் ராக்கம்மாள்தான். இளவரசரும் முருகய்யனும் அவள் நின்ற இடத்துக்கு அருகில் வரும் வரையில் அவள் பொறுமையோடு காத்திருந்தாள். திடீரென்று வெளிப்புறப்பட்டு ஓடி வந்து இளவரசரின் முன்னால் வந்து காலில் விழுந்தாள். முருகய்யன் அவளுடைய கவனத்தைக் கவர முயன்றான். உதட்டில் விரலை வைத்துச் சமிக்ஞை செய்தான். 'உஷ்' 'உஷ்' என்று எச்சரித்தான். ஒன்றும் பயன்படவில்லை.

"சக்கரவர்த்தித் திருமகனே! வீராதி வீரனே! பொன்னியின் செல்வா! சோழ நாட்டின் தவப் புதல்வா! சூடாமணி விஹாரத்தில் முழுகிப் போய் விடாமல் தாங்கள் பிழைத்து வந்தீர்களா? என் கண்கள் என்ன பாக்கியம் செய்தன?" என்று கூச்சலிட்டாள்.

வீதியில் அச் சமயம் அங்குமிங்கும் போய்க் கொண்டிருந்தவர்கள் அத்தனை பேருடைய கவனமும் இப்பொழுது இளவரசரின்பால் திரும்பின.

(தொடரும்)

# நியுபான்

## தாயின் அரவணைப்புக்கு ஈடான சிறந்த ஜீரண டானிக்




**சிறந்த மூலிகைகளைக் கொண்டு குழந்தைகளுக்காகத் தயாரிக்கப்பட்ட ஜீரண டானிக். பாதுகாப்பானது.**






குழந்தை பசியின்மை, வயிற்று வலி, விக்கல், வயிற்றுப் பொருமல், எதுக்களித்தல், மலபந்தம், பேதி முதலியவைகளால் பாதிக்கப்படலாம். இதனால் தேவையற்ற அழுகை, அமைதியற்ற தன்மை, தூக்கமின்மை ஆகியவையும் மற்றும் ஜலதோஷம், இருமல் ஆகியவையும் ஏற்படக்கூடும். அனுபவமிக்க தாய்மார்கள் பன்னெடுங்காலமாகத் தங்கள் குழந்தைகளின் ஜீரண சக்தியை வலுப்படுத்தவும், உடல் ஆரோக்கியத்தைப் பாதுகாக்கவும் உபயோகித்து நல்ல பலன் கண்ட சிறந்த மூலிகைகளான ஓமம், வசம்பு, சிற்றரத்தை, அதிமதுரம், திப்பிலி, கடுக்காய், ஏலக்காய் ஆகியவைகள் தேவையான அளவு நியுபானில் சேர்க்கப்பட்டுள்ளன. குழந்தை முழுமையான ஆரோக்கியத்துடனும், புஷ்டியாகவும் வளர விரும்பிச் சாப்பிடக்கூடிய ஜீரண டானிக்கான நியுபான் அவசியம் ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டியது.தொடர்ந்து கொடுத்து நல்ல பலன் காணவும்.

**ஆல்கஹால், போதைப் பொருட்கள், சோடியம்- பை-கார்பனேட் கலப்பு இல்லாதது.**




'விஜய்', மருத்துவக் கல்லூரி சாலை, தஞ்சாவூர் - 613 007, தமிழ்நாடு.
தொலைபேசி எண் : 22025/22225 டெலக்ஸ் : 0468-205 PPPL IN

**மருந்துக் கடைகளிலும், ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கும்.**

SOBHAGYA

# ஜபஜா

ஹரிகோபால் எல்லாரிடமும் தெலுங்கிலும், உருதுவிலும் பேசுவான். என்னிடம் மட்டும் தமிழ் பேசுவான். அவன் பேசுவதில் நீ, நான் என்பதைத் தவிர இதரச் சொற்கள் தெலுங்கோ, உருதுவாகவோதான் இருக்கும். ஒன்பதாவது வகுப்பிலிருந்து எங்கள் கல்வி ஒரே பள்ளியில், ஒரே வகுப்பறையில் இருந்து வந்ததால் எனக்கு எல்லாம் பழகிப் போயிற்று. அப்படியிருந்தும் அன்று அவனை, "என்ன? என்ன?" என்று கேட்டேன்.

"அந்த தொப்பாஸ்குட்டி வெங்கட கிருஷ்ணராவ் இல்லே, அதை அவுங்க ஜமீன்லே துக்டா துக்டா பண்ணிப் போட்டுட்டாங்க."

"அடிச்சுட்டாங்களா?"

"அடிக்கறது இல்லைய்யா. அவனை கதம் பண்ணிட்டாங்க. சாவடிச்சுட்டாங்க."

"நிஜம்மாவா?"

நான் அவனை விட்டுப் பிரிந்த பிறகு கூடப் பலமுறை நிஜமாகவா, நிஜமாகவா என்று எனக்குள் கேட்டுக் கொண்டிருந்தேன். தொப்பாஸ்குட்டி, தொப்பை, ஃபுட்பால், ஹிப்போ என்றெல்லாம் நாங்கள் கூப்பிட்டாலும் எப்போதும் சிரித்தபடியே அன்பாக இருக்கும் வெங்கடகிருஷ்ணராவ் செத்துப் போய் விட்டான். இனிமேல் நான் அவனைப் பார்க்க முடியாது. யாருமே பார்க்க முடியாது.

அடுத்தடுத்த ஊர்களானாலும் சிகந்தராபாத்பையன்களுக்கும்ஹைதராபாத்பையன்களுக்கும் நிறைய வித்தியாசங்கள் உண்டு. சிகந்தராபாத் பையன்கள் பாண்ட் போட்டிருந்தால் ஒழுங்காக ஷர்ட்டை உள்ளே மடக்கி விட்டிருப்பார்கள். ஹைதராபாத் பையன்கள் பாண்ட்டைப் பைஜாமா மாதிரிதான் உடுத்தியிருப்பார்கள். சிகந்தராபாத் பையன்கள் தெலுங்கு பேசுவார்கள். முஸ்லிம் பையன்கள் கூடத் தெலுங்கு பேசினால் நன்றாகப் புரிந்து கொள்வார்கள். ஹைதராபாத் பையன்களிடம் எதற்கும் எல்லாவற்றுக்கும் உருதுதான். உண்ணும் உணவு கூட மாறுபடும். சிகந்தராபாத்தில் தலைப்பாகை கட்டியவர்களை நிறையப் பார்க்கலாம். ஹைதராபாத்தில் குல்லா. விதவிதமான குல்லாக்கள். எம்.ஜி.ஆர்., வி.பி. சிங் போன்றவர்கள் அந்த நாளிலேயே ஹைதராபாத் சென்றிருக்க வேண்டும்.

இதனால் இரு நகரங்களுக்கும் பொதுவாக இருந்த ஒரே ஆங்கில மீடியம் கல்லூரியிலும் சிகந்தராபாத் மாணவர்கள், ஹைதராபாத் மாணவர்கள் என்ற பிரிவினை தொடர்ந்தது. பாண்ட்டைப்





பைஜாமா மாதிரி பயன்படுத்துபவனாக இருந்தாலும் எப்போதும் சிரித்த முகமாகவும் சிரிப்பதற்குத் தயாராக இருப்பவனாகவும் தோன்றும் வெங்கடகிருஷ்ணராவ் பகல் இடைவேளை நேரத்தில் என்னுடைய சைக்கிளைக் கடன் வாங்கிப் போய் சாப்பிட்டு விட்டு வருவது வழக்கமாயிற்று. அந்த நாளிலேயே ஹைதராபாத்தில் பல சாலை



## அசோகமித்திரன்

களும் தெருக்களும் சிமெண்ட் போடப்பட்டு வெகு நேர்த்தியாக இருக்கும். அப்படி இருந்தும் வெங்கடகிருஷ்ணராவ் இரு நாட்களுக்கு ஒருமுறை என் சைகிளைப் பங்க்சர் ஆகும்படி செய்து, பிற்பகல் வகுப்புகளில் 'மாஃப் கரோ பிரதர், மாஃப் கரோ பிரதர்' என்று சொல்லியவண்ணம் இருப்பான். கல்லூரி முடிந்த பிறகு நாங்கள் இருவரும் சைகிளை பங்க்சர் ஒட்டத் தள்ளிக் கொண்டு போவோம். அவன் மிக வேகமாகப் பேசுவான். எதைப் பற்றி என்ன சொல்கிறான் என்று நான் ஊகித்துக் கொள்ள வேண்டும். அப்படி இருந்தும் நாங்கள் இருவரும் நிறைய விழுந்து விழுந்து சிரித்திருக்கிறோம். ஹரிகோபால் பல சமயங்களில், ''நீ என்னாது எங்களை எல்லாம் உட்டுட்டு அந்த தொப்பாஸ் குட்டியைப் பிடிச்சிருக்கே? பைசாக்காரன்னா? தெலுங்கானா ரெட்டிங்க கிட்டே படா உஷாராயிருக்கணும். அவங் கூடப் போவாதே.'' என்று சொல்லியிருக்கிறான்.

எனக்கு எப்படி ராவ் என்ற பெயர் கொண்டவன் ரெட்டியாகவும் இருக்க முடியும் என்று சந்தேகம். வெங்கட



கிருஷ்ணராவ் ரெட்டி என்பது அனந்தாச் சாரி முதலியார் என்று சொல்வது போல இருந்தது. வெங்கடகிருஷ்ணராவுக்கும் அதைப் பற்றி எல்லாம் அதிகம் தெரியாது என்பது அவனுடைய பதிலில் சொற்களின் ஓட்டம் தட்டுத் தடுமாறி வந்ததிலிருந்து தெரிந்தது.

ஹைதராபாத் பையன்களிடம் கூட வெங்கடகிருஷ்ணராவின் மரணம் பெரிய பரபரப்பை ஏற்படுத்தியதாகத் தெரிய வில்லை. அப்போது அந்தப் பிரதேசமே வேறு ஒரு பெரிய அரசியல் பரபரப்பில் மூழ்கியிருந்தது. ஒரு வாரம் முன்புதான் ரஜாக்கார் தலைவன் காசிம் ரஸ்வியின் 'டில்லி செங்கோட்டையில் அஸஃப் ஜாவின் கொடி பறக்கும்' உரை நிகழ்த்தப் பட்டிருந்தது.

அன்று பிற்பகல் என் சைகிள் கடன் கொடுக்கப்படாமலேயே பங்க்சர் ஆகியிருந் தது. வெங்கடகிருஷ்ணராவ் உயிரோடு இருந்திருந்தால் நடந்து போய்த்தான் சாப் பிட்டு விட்டு வர வேண்டும். ஒரு சிறு வீட்டில் அவனும் அவனுடைய சமையல் காரனுமாக இருந்து வந்தார்கள். அந்தச் சமையலாளர் காலை ஒன்பது மணிக்கு முன்னால் படுக்கையை விட்டு எழுந்திருக்க மாட்டான் என்று வெங்கடகிருஷ்ணராவ் என்னிடம் கூறியிருந்தான். அவனுக்குப் பகல் ஒரு மணி உணவுதான் பொழுது விடிந்து முதல் உணவாயிருக்கும். அக் காரணத்திற்காக இரண்டு மைல் சைகிளில் சென்று சாப்பிட்டு விட்டு வருவான். தனி வீடு, சமையல்காரன் வைத்துக் கொள் பவன் நல்லதாக ஒரு சைகிள் ஏன் வாங்கிக் கொள்ளக் கூடாது என்று நானே கேட்டிருக் கிறேன். அது முடியாவிட்டால் ஏன் சமையல்காரனையே சாப்பாட்டைக் கல்லூரிக்குக் கொண்டு வரச் சொல்லக் கூடாது? விஷயம் சற்றுச் சிக்கலானது. வெங்கடகிருஷ்ணராவின் தாத்தாவுக்குப் பிள்ளைகள் கிடையாது. ஆனால் சகோத ரர்கள் உண்டு; அவர்களுக்குப் பிள்ளைகள் உண்டு. ஆதலால் பெண் வயிற்றுப் பேரனா கிய வெங்கடகிருஷ்ணராவை அவர் தத்து எடுத்துக் கொண்டிருந்தார். அவருக்கு சைகிள் பிடிக்காது. அதற்கும் காரணம் உண்டு: தந்திக்காரர்கள் எப்போதும் சைகிளில்தான் வருவார்கள். தந்திகள் எப் போதும் துக்கச் செய்திகளைத்தான் தாங்கி வந்தன. ஆதலால் சைகிள் துக்கத்தின் வாகனம். விளைவு, என் சைகிள் வெங்கட கிருஷ்ணராவைச் சுமக்க வேண்டியதா யிற்று.

அன்று கல்லூரி முடிந்த பிறகு நான் சைகிளைத் தள்ளிக் கொண்டு ஹைதரா பாத்தில் வெங்கடகிருஷ்ணராவ் தங்கி யிருந்த வீட்டுக்குப் போனேன். வாசல் கதவு பூட்டியிருந்தது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். மூன்று நான்கு பாண்ட் ஷர்ட்டு கள் கோட் ஸ்டாண்டில் தொங்கிக் கொண் டிருந்தன. அவனுடைய பாண்ட் சாக்குத் துணியில் தைத்த மாதிரி இருக்கும். இதற்கு நீ ஒரு கோணிப் பையையே கிழித்து பாண்ட் தைத்துக் கொள்ளலாமே என்று நான் அவனைக் கேலி செய்திருக்கிறேன். ஆனால் அதற்கு மட்டும் சிரிக்காமல் அவன் பதில் சொன்னான். அந்தத் துணி கதர்த் துணி. அவனுடைய தாத்தா எப்போதும் கதர்தான் பயன்படுத்துவார். அவனுக்கும் அந்தத் துணிதான் பிடிக்கும். அவனுக்குக் குரு, தெய்வம் எல்லாம் காந்திதான்.

''கதர் வெள்ளையாத்தானே இருக்கும்?''

''வெள்ளையிலேயும் இருக்கும். சாயத்தி லேயும் இருக்கும். ஒரு வேளைக்கு ஒண்ணு போட்டுக்கறதுன்னா வெள்ளை பாண்ட் போட்டுக்கலாம்.''

எனக்குக் காந்தி பற்றி அதிகம் தெரி யாது. ஆனால் வெங்கடகிருஷ்ணராவ் அவர் மீது கொண்டிருந்த விசுவாசம் எனக்கு அவரை மிக விசேஷமான பிறவி யாகக் காட்டிக் கொடுத்தது. அவன் அவர் படம் ஒன்றைத்தான் வணங்குவான்.

அருகில் இருந்த மரத்தடி சைகிள் ரிப்பேர்க்காரனிடம் பங்க்சர் ஒட்டிக் கொண்டு, ''இந்த வீட்டுக்காரர்கள் எப்போது வருவார்கள்?'' என்று கேட்டேன்.

''அந்தப் பையன் ஊர்லே செத்துட் டான், தெரியுமா?''

''எப்படி? யார் சொன்னாங்க?''

''எனக்கு என்ன தெரியும்? இங்கே ஊர்லே வந்த ஆளு யாரோ கம்யூனிஸ்டுங்க கொன்னுட்டாங்கன்னு சொன்னான். துண்டு துண்டா வெட்டிப் போட்டாங்கள ளாம்.''

எனக்கு மிகவும் துக்கமாக இருந்தது. யார் இந்த கம்யூனிஸ்டுகள்? ஏன் பதினாறு வயது கூட நிரம்பாத ஒரு பையனைக்



தயாரிப்பாளர்: வரிவிலக்கு வாங்குகிற மாதிரி ஒரு படம் எடுக்கணும்.. என்ன செய்யலாம்?

டைரக்டர்: படத்துக்குப் 'பஞ்சாயத்து ராஜ்யம்'னு பேர் வைக்கப் பாருங்க ளேன்!

— ஷெந்தில்.

# எழுதலாமே எங்களுக்கு!...

மேலும் ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற எனது நீண்ட நாளைய விருப்பம் தங்களது பயிற்சியின் மூலம் நிறைவேறும் என நம்புகிறேன். எனவே தயவு கூர்ந்து எனது முகவரிக்கு இப் பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் அனுப்புமாறு வேண்டுகிறேன்.

இப்படிக்கு
ஹரிஹர்

15
INDIA
WRITE PIN CODE IN ADDRESS

விவேகானந்தா கல்வி நிலையம்
9. மேட்லி ரோடு,
தி. நகர்,
சென்னை
PIN 600017

★ வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற விருப்பம் உடையவரா நீங்கள்?

★ ஆங்கில மொழியில் போதிய புலமையின்மையினால் உங்களது முன்னேற்றம் தடைபடுகிறதா?

★ மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசுவதை ஓரளவு புரிந்து கொண்டாலும், அவர்களிடம் ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்று தயக்கமாக இருக்கிறதா?

★ ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற உங்களது விருப்பம் நிறைவேற பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் நீங்கள் எதிர்பார்த்த முன்னேற்றம் ஏற்படவில்லையா?

★ இக்குறைகளை யாரிடம் கூறுவது, எப்படித் தீர்வு காண்பது என்பது பற்றி சிந்தித்து வருகிறீர்கள் அல்லவா?

கவலையை விடுங்கள்.

தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாக உரையாட வேண்டும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற வேண்டும் என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் நிறைவேற ஓர் எளிய பயிற்சி முறையினை தமிழகத்தின் தலைசிறந்த கல்விநிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் அளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் முறையில் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம். **"நேர்முகப் பயிற்சியும் உண்டு"**.

இன்றே ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதலாமே எங்களுக்கு.

நீங்கள் எழுத வேண்டிய முகவரி:

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**த. பெ. எண் 4986,**
**9, மேட்லி ரோடு, தி.நகர்,**
**சென்னை 600 017.**



''ஸ்கூல் திறக்கப் போறதை நினைச்சா ரொம்பப் பயமாயிருக்குப்பா!''

''கைதிறையச் சம்பளம் வாங்குகிற நீயே இப்படிப் பயப்பட்டால் எப்படி?''

''அட, அதுக்கில்லைப்பா... ரெண்டு மாசம் ஹாய்யா இருந்தாச்சு. இனிமே பிள்ளைகளோட 'ஹோம் வொர்க்' கைச் செய்யணுமே!''

— ஆ. நல்லமுத்து.

கொல்ல வேண்டும்? கம்யூனிஸ்டுகளுக்கும் போலீசுக்கும்தானே சண்டை? வெங்கட கிருஷ்ணராவ் அவர்களுக்கு என்ன செய்தான்?

ஹைதராபாத்தில் தெரு விளக்குகள் எரியத் தொடங்கியவுடனேயே சைகிள் விளக்குகளும் ஏற்றப்பட வேண்டும். போலீசுக்கு விளக்கு இல்லாத சைகிள்கள் கம்யூனிஸ்டுகள் மாதிரி. அந்த நாளில் கம்யூனிஸ்டுகளுக்குத் தடை இருந்தது. நிஜாம் அரசு வரை காந்திக் குல்லா கம்யூனிஸ்டுக் கொடி இரண்டுமே விரட்டியடிக்கப்பட வேண்டியவை. நான் என் வீடு வரை ஐந்து மைலும் சைகிளைத் தள்ளிக் கொண்டு நடக்க முடிவு செய்து விட்டேன். கவலையே இல்லாமல் வெங்கடகிருஷ்ணராவ் வீட்டு முன்னால் காத்திருந்தேன்.

ஏழு மணிக்கு வெங்கடகிருஷ்ணராவின் சமையல்காரன் ஒரு கருட்டைப் புகைத்த வண்ணம் வந்தான். ''யார் நீ?'' என்று தெலுங்கில் என்னைக் கேட்டான். அவனுக்குத் தெலுங்கு ஒன்றுதான் தெரியும்.

''உன் சின்ன எஜமானுடைய நண்பன். என் சைகிளில்தான் பகலில் சாப்பிட்டு விட்டு வருவான்.''

அவன் சைகிளை அடையாளம் கண்டு கொண்டான். ''எஜமான் செத்துப் போயிட்டாரு.'' என்று துக்கத்தோடு சொன்னான்.

''நிஜமாகவே துண்டு துண்டாக வெட்டிப் போட்டு விட்டார்களா?''

''ஆமாம், பாபு. அப்படித்தான் ஆள் வந்து சொன்னான். என்னையும் உடனே வீட்டைக் காலி பண்ணி விட்டு வரச் சொல்லியிருக்காங்க.''

''எனக்கு அவர் நெருங்கிய நண்பர். எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கிறது.''

''எங்களுக்கெல்லாம் கூடத்தான். எங்களைக் கோபித்துக் கொள்ள மாட்டார். கடுமையாக ஒரு சொல் சொல்ல மாட்டார். நான் காலையில் ஒரு டீ கூட அவருக்குத் தயாரித்துத் தர மாட்டேன். அப்போதும் ஒன்றுமே சொல்ல மாட்டார்.''

''யார் கொன்றார்கள்?''

''யாரோ கம்யூனிஸ்டுகள் என்று சொல்கிறார்கள்.''

''அவர்களுக்கு இவர் மேல் என்ன கோபம்?''

''யாருக்கு என்ன தெரியும்? பைசா இருக்கிறவர்களை எல்லாம் அவர்கள் கொல்லுகிறார்களாம்.''

எனக்கு வெங்கடகிருஷ்ணராவை ஒரு படாடோபப் பணக்காரனாக நினைத்துப் பார்க்க முடியவில்லை. எல்லாரிடமும் ஒரே மாதிரி சிரித்துப் பேசுபவன் பைசாக்காரன் என்று சொல்லப்படுவோர் போல நடந்து கொள்ள முடியாது. எப்போதும் முரட்டுத் துணியில் உடை உடுத்திக் கொண்டு, சமையல்காரனுக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்று தானே வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டு வரும் வெங்கடகிருஷ்ணராவால் அடாவடியாகவும் அகம்பாவத்துடனும் யாரிடமாவது நடந்து கொள்ள முடியுமா?

சமையல்காரன் கோட் ஸ்டாண்டில் தொங்கிக் கொண்டிருந்த துணிமணிகளை எடுத்து மடித்து வைக்கத் தொடங்கினான். ''உன் பொருள் இங்கே ஏதாவது இருக்கிறதா, பாபு?'' என்று கேட்டான்.

இல்லை என்று தலையசைத்து விட்டு விம்மி விம்மி அழத் தொடங்கினேன்.

''அழாதே, பாபு. அழாதே,'' என்று அவன் சொன்னான். ''உனக்கே இவ்வளவு கஷ்டமாயிருந்தா இவனுடைய தாத்தாவுக்கு எவ்வளவு கஷ்டமாயிருக்கும்?''

நான் அழுதுகொண்டே இருந்தேன்.

''பைசா ரொம்பக் கெட்டது, பாபு. எல்லாப் பணமும் இவன் தாத்தா இவனுக்குத்தான் என்று ஊர் முழுக்கச் சொல்லிக் கொண்டிருந்தார். அவருடைய பங்காளிகளெல்லாம் சும்மா விடுவார்களா? பார், இந்தப் பையனுக்குப் பெண் சுகம் என்றால் என்ன என்று தெரியாது. அதற்குள் தீர்த்துக் கட்டி விட்டார்கள்.''

''அப்போது வெங்கடகிருஷ்ணராவைக் கம்யூனிஸ்டுகள் கொல்லவில்லையா?''

''யாருக்குத் தெரியும், பாபு? இவர்கள் சொல்கிறார்கள் கம்யூனிஸ்டுக்காரர்கள் கொன்று விட்டார்கள் என்று. ஆனால் இந்தச் சாவினால் பலன் வேறே யாருக்கோ.''

நான் கண்ணைத் துடைத்துக் கொண்டு கிளம்பினேன். சமையல்காரன் சொன்னான், ''பார்த்துப் போ, பாபு. யாராவது சொத்துக் கொடுக்க வந்தால் வேண்டாம் என்று சொல்லு.''

ஹரிகோபாலிடம் இதைச் சொன்னேன்.

''உனக்கு நிஜம் தெரியாது. இவன்தான் இவன் சின்னத் தாத்தா மகன்களைக் கொல்லறதுக்கு ஏற்பாடு பண்ணிண்டிருந்தானாம். பைசாக்காரங்க எல்லாருமே பத்மாஷுங்க,'' என்று ஹரிகோபால் சொன்னான்.

# விண்ணப்பம்

## சமய, சமூகப் பணியில் ஆர்வமுள்ள அனைவருக்கும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் கொடுக்கும் ஒரு அறிவிப்பு

இப்பவும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் 55-வது ஆண்டு விழா 21.7.89 அன்று வருகிறது. அது சமயம் காஞ்சி காமகோடி பீடம் சார்பிலும், பொன் விழா டிரஸ்ட் சார்பிலும் பல விதமான அறப்பணிகளுக்கு பல கோடிக் கணக்கான ரூபாய் செலவிடப்பட இருக்கிறது. முக்கிய மாக, கோயில் திருப்பணி, கோயில் நித்ய பூஜை உதவி செய்தல், கோ சம்ரக்ஷணம், ஆஸ்பத்திரி, பள்ளிக் கூடம், அனாதை இல்லம், விருத்தாஸ்ரமம், கல்யாணத் திற்கு உதவி செய்தல் முதலியன இதில் அடங்கும்.

இதற்கென ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி கோல்டன் ஜுபிலி சாரிடபிள் டிரஸ்ட், ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமி களின் 55வது ஜயந்தி தினத்தையொட்டி ஒரு நிதி வழங்க தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. கோடிக்கணக்கான சமய சமுதாய பணிகளில் ஆர்வமுள்ள அனைவரும் தங்கள் சக்திக்கு ஏற்றவாறு ஒரு ரூபாய் முதல் 1000 ரூபாய் கணக்காக இந்த நிதிக்குக் கொடுப்பதுடன் அன்றைய தினம் அவர்களை தரிசித்து ஆசார்ய ஸ்வாமிகளின் ஆசீர்வாத பிரஸாதமும் பெறும்படி கேட்டுக் கொள்கிறோம். இந்த நிதி உதவிக்கு வருமான வரி விலக்கு உண்டு. நிதி உதவி அனுப்ப வேண்டிய முகவரி

**Sri Jayendra Saraswathi**
**Golden Jubilee Charitable Trust**
**Rama Samajam**
**West Mambalam Madras - 600 033.**

பிரபஞ்சன்

# சுகபோகத் தீவுகள்

பிலோமினாவும், விநோதினியும் காலை உணவு உண்டு கொண்டிருந்தார்கள். காலை உணவு இட்லியும் தோசையும் காப்பியும். பிலோமினா விநோதினியிடம் சொன்னாள்.

"தமிழர்களுக்கு இந்த இட்லிகளின் மேல் இருக்கும் ஈடுபாட்டுக்கு மனோரீதியான காரணம் கூட இருக்கத்தான் செய்கிறது. தினம் காலையில் இரண்டாயிரம் ஆண்டுகளாக நாம் இட்லி சாப்பிட்டுக் கொண்டிருக்கிறோம். நமக்கு அவை சலிப்பதேயில்லை. இந்த மாவினால் வேறு வகைப் பலகாரங்களை நாம் முயற்சி செய்து கூடப் பார்ப்பதில்லை. நாம் பழக்கத்துக்கு அடிமைப்பட்டுக் கிடக்கிறோம் என்பதே காரணம். சில விஷயங்கள் நம் மனத்தில் காலம் காலமாகத் தண்ணீருக்குள் இருக்கும் கற்கள் மாதிரி முழுகிக் கிடக்கின்றன. பெண்களைக் குறித்து நம் சிந்தனைகள் அடிமனத்தில் ஆழமாகக் கிடக்கின்றன. ரொம்ப விசித்திரமான சிந்தனைகள். மனிதரை மனிதர் தாக்கிக் கொள்வதில் மோசமான வார்த்தையே, ஒருத்தன் தாயை, மனைவியை விமர்சிக்கும் வார்த்தையாகவே இருக்கிறது. ஆகவே, ஒரு மனிதனின் உணர்ச்சியை முனைப்படுத்த, பெண்ணே ஆயுதமாக இருக்கிறாள். அந்த உணர்ச்சியை நீயும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்."

காப்பியை அருந்தியபடி விநோதினி கேட்டாள்.

"எப்படி? எப்படி கிருஷ்ணமூர்த்தியை அரசியல் புதை மண்ணிலிருந்து மீட்பது என்று கேட்டேன். நீ ஏதோ சைக்காலஜி சொல்லிக் கொண்டு இருக்கிறாய்."

"அதைத்தான் நானும் சொல்லிக் கொண்டு இருக்கிறேன். அவசரப்படாதே. எல்லா மனிதனுக்குள்ளும் இருக்கிற உணர்ச்சிதானே கிருஷ்ணமூர்த்திக்கும் இருக்கும். நீங்கள் அரசியலில் ஈடுபடுவது அவருக்குப் பிடிக்காது."

"அரசியல்வாதி அவர். நானும் அரசியல்வாதியாவது அவருக்கு எப்படிப் பிடிக்காமல் போய்விடக் கூடும்?"

"அதுதான் மனிதனின் குறிப்பாகத் தமிழனின் சைக்காலஜி. சினிமா விமர்சனம் செய்யும்போது கூட, 'இது பெண்களுடன் உட்கார்ந்து பார்க்க முடியாத படம்' என்று தமிழர் சொல்வதைக் கேட்டது இல்லையா? பெண்கள் உட்கார்ந்து பார்க்க முடியாததை, ஆண்கள் மட்டும் உட்கார்ந்து பார்ப்பது சரிதானா? இதுதான் தமிழனின் மனோதத்துவம். அதாவது ஆண்கள் உலகம் என்று ஒன்று வேறாக இருப்பது போலவும், பெண்கள் அதற்குள் பிரவேசிக்கக் கூடாது என்பது மாதிரியும் ஒரு மனோநிலை அவனுக்கு இருக்கிறது. கிருஷ்ணமூர்த்திக்கு அரசியல் உலகம் குறித்து, அதன் உள் கலாசாரம் குறித்து ஒரு கருத்து இருக்கும். ஆனால் அதில் அவரின் நெருக்கமான பெண்கள் பிரவேசித்துவிடக் கூடாது என்கிற எச்சரிக்கை உணர்வும் இருக்கும். நீ அர



சியலில் பங்கு வகித்தால், இரண்டு வகையாக அவர் அதை எதிர்கொள்ளக் கூடும். ஒன்று உன்னிடமிருந்து அவர் விலகலாம். இரண்டாவது அரசியலில் இருந்தே அவர் விலகலாம். இரண்டுக்கும் சாத்தியம் இருக்கிறது.''

அவர் அரசியலில் இருந்து விலகுவது தான் என் ஆசை.''

''சரி, அப்படியே செய்கிறார் என்று வையுங்கள். அதற்குப் பிறகு அவரை எப்படி வழிநடத்திச் செல்வீர்கள்?''

''இந்த முறை சாராப் பள்ளியிலேயே அவர் பணி செய்யலாம். நான் இந்த அரசியலுக்கு எப்போதும் வைரிதான். அவரை வெளி எடுக்கவே நான் உள்ளே செல்கிறேன்.''

''உள்ளே செல்... பத்திரமாக வெளியே வா. அபிமன்யு மாதிரி நீயும் உள்ளே சிக்கிக் கொள்ளாதே...''

''எனக்கு எந்த நேரத்தில் 'நோ' சொல்ல வேண்டும் என்று நன்றாகவே தெரியும்.''

''பெண்கள் அதை மட்டும் தெரிந்து கொண்டால் போதும். பெரும்பாலான துன்பத்திலிருந்து அவர்கள் தங்களைக் காத்துக் கொள்ளலாம்.''

கிருஷ்ணமூர்த்தியை முதல்வர் அன்று காலை சந்திக்க விரும்புவதாகத் தகவல் வந்தது. அவருடைய அந்தரங்கச் செயலாளர் தான் போன் செய்தார்.

''என்ன விஷயம்?'' என்றான் கிருஷ்ணமூர்த்தி.

''தெரியாது ஸார்... தங்களைப் பார்க்க வேண்டும் என்று மட்டும் சொன்னார்.''

''காலை என்றால் எத்தனை மணி?''

''தங்களுக்குத் தெரியாதா? முதல்வருக்குக் காலை என்றால் நான்கு மணி அல்லவா? விடியற்காலை நான்கு மணிக்குப் பிறகு அவர் என்று உறங்கினார்? ரொம்ப



## அருள்வாக்கு



லோகோபகாரமாகச் செய்யக் கூடிய அநேகப் பணிகளில் ஸத்பாத்ரத்துக்கு வித்யையைப் போதிப்பதற்கு ஸமமாக எதையும் சொல்ல முடியாது என்று நம் முன்னோர் அபிப்பிராயப் பட்டனர். 'வித்யாதானம்,' 'வித்யா தானம்' என்று இதை மிகவும் விசேஷித்துச் சொல்லியிருக்கிறது. 'தானம்' என்ற பதத்தைப் போட்டதாலேயே கற்றுக் கொடுக்கிற ஆசார்யர் வித்யார்த்தியிடமிருந்து எந்த த்ரவ்ய லாபமும் எதிர் பார்க்கக் கூடாது என்று ஏற்படுகிறது.

மநுஸ்ம்ருதியில் இதைப் பற்றிச் சொல்லும்போது, "தானங்களிலேயே சிறப்பு வாய்ந்தவற்றுக்கு அதிதானம் என்று பேர். கோதானம், பூதானம், வித்யா தானம் ஆகிய மூன்றும் அதிதானங்கள். அன்னதானமும் உயர்வானது. வயிற்றுக்கு அன்னம்போடுவதைவிட அறிவுக்கு அன்னமாக வித்யாதானம் செய்வது சிறப்புடையது. வித்யைகளில் பல இருக்கின்றன. இவற்றில் எதை தானம் செய்வதுமே விசேஷந்தானென்றாலும், வித்யைகளுக்குள்ளேயே தலைசிறந்ததாக உள்ள ஆத்ம வித்யையான ப்ரஹ்ம வித்யையை தானம் செய்வதன் சிறப்பைச் சொல்லி முடியாது. ப்ரஹ்ம வித்யாதானம் செய்பவனுக்கு தேவலோகமான ஸ்வர்க்கம் மட்டுமின்றி, ஸம்ஸார பந்தமே தீர்ந்து பரமாத்மாவோடு ஐக்யப்பட்டிருப்பதான மோக்ஷமும் கிட்டிவிடுகிறது என்றெல்லாம் புகழ்ந்து சொல்லியிருக்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

முக்கியமானவர்களைக் காலை நாலு மணியிலிருந்து எட்டு மணிக்குள் அல்லவா அவர் சந்திப்பது வழக்கம்?

இருள் முற்றும் விலகாத காலைப் பொழுதில், மரங்கள் அடர்ந்த தோட்ட வீட்டில், கிருஷ்ணமூர்த்தி, முதல்வரின் அழைப்பை எதிர்பார்த்துக் கொண்டு வரவேற்பறையில் அமர்ந்திருந்தான். அந்த அதிகாலை வேளையிலும் முதல்வரின் வீடு பரபரப்பாய் இருந்தது. அரசியல், மற்றும் ஆட்சியின் மிக முக்கியஸ்தர்களின் வெள்ளை ஆடையால் அந்த வீடே வெளிச்சம் உள்ளது மாதிரி இருந்தது.

"என்ன கிருஷ்ணமூர்த்தி? உங்கள் மாமாவின் சென்னை வீட்டையும், அவர் மாவட்டத்தில் இருக்கும் சொந்த வீட்டையும், சி. பி. ஐ. ரெய்டு பண்ணியதாமே!" என்றார் அங்கு வந்திருந்த கல்வியமைச்சர்.

"அப்படியா சார், எனக்குத் தெரியாதே!"

"எனக்கே தெரியாது. காலை மூணு மணிக்குப் படுக்கையை விட்டு என்னை எழுப்பி முதல்வர் சொன்ன தகவலே அது தான்."

"ச்ச்ச்."

"என்ன வருத்தப்படறியா? இதில்என்ன வருத்தப்பட இருக்கிறது? நேத்து ராத்திரி ஒரு மகாபாரத நாடகம் பார்த்தேன். திருதராஷ்டிரன் அரண்மனைக் கொலு மண்டபம். வீர புத்திரர்கள் பாண்டவர் முன்னிலையில் திரௌபதி மானபங்கப்படுத்தப் படுகிறாள். பாண்டவர்கள் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டே சும்மா இருந்தார்கள் என்று வைத்துக் கொள்வோம். தர்ம சாஸ்திரங்கள் எல்லாவற்றையும் கரைத்துக் குடித்த கங்கா புத்திரர் என்ன, துரோணர் என்ன, அசுவத்தாமர் என்ன, எப்படிப்பட்ட மனிதர்கள் அங்கே இருந்தார்கள்? யாராவது ஒருத்தர் எழுந்து, 'நிறுத்தடா நாயே'' என்று துரியோதனனையும், துச்சாதனனையும் பார்த்துச் சொன்னார்களா? சொல்கிற திராணி இருந்ததா? ஏன்? அதுதாம்பா மனிதத்வம். நமக்கென்ன போச்சு என்கிற மனோபாவம் தான். ஆட்சி செய்வோரைப் பகைத்துக் கொண்டு நம் வயிற்றில் மண்ணை அள்ளிப் போட்டுக் கொள்ளத்தான் வேண்டுமா என்கிற மனோபாவம்தானே காரணம்? மகாபாரதத்திலிருந்து இந்தப் புதிய அம்சத்தை நாம் கற்றுக் கொள்ள வேண்டும். காந்தியாரின் பொம்மைகள் சொல்கிற தத்துவம் என்ன? நமக்கென்ன, நமக்கு நஷ்டம் வராத வரைக்கும், நமக்குச் சம்பந்தம் இல்லாத காரியங்களைப் பார்க்காதே, பேசாதே, கேட்காதே என்றுதான் அர்த்தப் படுத்திக் கொள்ள வேண்டும். நவீன அரசியல் நெறி அதுதான். தெரியுமா? அந்த சீனிவாசன் என்கிற பையனை — அதாம்பா — பள்ளிக்கூட மேடையில் வைத்து என்னை அவமானப்படுத்தினானே — அந்தப் பையனைக் கம்பி எண்ண வைத்து



"எல்லாரும் மாலையும் கையுமா நிக்கிறாங்களே... புது மானேஜர் வர்றாரா?"

"ஊகூம். மந்திரி சிபாரிசு செய்த, புது பியூன் வர்றாராம்...!"

— ஆர். வசந்தகுமார்.

விட்டேன். சொன்னதுதான் தாமதம், நம்ம போலீஸ் எப்படி இயங்கியது என்கிறாய்? ஊரில் இருக்கிற பெட்டிக் கடைகள் எல்லாவற்றிலும் தொங்குகிற ஆபாசப் பத்திரிகைகள், ஆபாசப் புத்தகங்கள் எல்லாவற்றையும்மற்றும்அந்நியதேசத்துப்பொருள்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போய், அவன் வீட்டில் போட்டு, ஆபாசப் புத்தகங்கள் விற்பவன், கடத்தல் பொருள் வியாபாரி என்றெல்லாம் அவன் மேல் குற்றம் சாட்டி, குண்டர் தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் உள்ளே தள்ளச் செய்துவிட்டேன்..."

கல்வி அமைச்சர் சொல்லச் சொல்ல, கிருஷ்ணமூர்த்தியின் மனம் மிகுந்த வேதனையில் ஆழ்ந்தது. இது என்ன போர் முறை? வெறுங்கையுடன் நிற்கிற ஒரு போர் வீரனை, சகல ஆயுதங்களும் தரித்த ஒருவன் சண்டைக்கு இழுத்துக் கொன்று போடுவது என்ன நீதி? தவிரவும், தத்துவரீதியாகக் கருத்துப்போருக்குநின்றஒருவனை ஆபாசப் பத்திரிகை விற்பவன், கடத்தல் வியாபாரி என்ற பெயரிலா கைது செய்வது? இது என்ன கொடுமை? விநோதினி சொன்னது நினைவுக்கு வந்தது — 'இந்த தேசத்தில், மிகப் பெரிய படிப்புப் படித்த அருமையான இளைஞர்கள் ஆயிரக்கணக்கில் நக்சலைட் என்ற பெயரில், ஆபாசப் பத்திரிகை வைத்திருப்பவர் என்ற பெயரில், இன்னும் என்ன என்ன பெயரிலோ அடைக்கப்பட்டிருக்கிறார்கள். பிரிட்டிஷ் ஆட்சி கூட தேசத்தியாகிகளைக் குண்டர்கள் என்று சொல்லவில்லை. சொந்த தேசத்து அறிவார்ந்த மகனை, சுதேச அரசு இப்படிப் பழி சொல்வது எவ்வளவு பெரிய பேடித்தனம்?'

முதல்வரின் அறையிலிருந்து அழைப்பு வந்தது.

அறையில் முதல்வரோடு, கட்சியின் அவைத் தலைவர் வீரமுத்துவும் இருந்தார்.

"நலம்தானா?" என்றார் முதல்வர்.

"ஐயா தயவில் நன்றாக இருக்கிறேன்" என்று பதிலளித்தான் கிருஷ்ணமூர்த்தி.

"கொஞ்சம் சதை போட்டிருக்கே. தினம் உடற்பயிற்சி செய்யச் சொன்னேனே, செய்கிறாயா?"

"நேரம் இல்லை, சார்..."

"முட்டாள் மாதிரி பேசாதே. வாழ்க்கையில் உயர வேண்டும் என்று நினைப்பவனுக்கு எல்லாவற்றுக்கும் நேரம் இருக்கும். நாளைக் காலை நாலு மணிக்கு நான் உன் வீட்டுக்கு வருவேன். நாம் இருவரும் உடற்பயிற்சி செய்கிறோம்..."

"ஐயோ... உங்களுக்கு ஏன் வீண் சிரமம்?"

"சும்மா இரு... உம்... ஒரு விஷயம். கட்சியின் பல பிரிவுகளுக்கும் அமைப்பாளர்களைப் போட்டுக் கொண்டிருக்கிறோமே. மாதர் பிரிவை யாருக்குத் தருவது?"

"ஐயா என்ன நினைக்கிறீர்களோ...? எனக்குக் கொஞ்சம் யோசிக்க நேரம் தாருங்களேன்..."

"தலைமை தாங்கும் பெண் இளமையாக, படித்தவளாக, இனிமையானவளாக, தலைமைக் குணம் உடையவளாக, எல்லாவற்றுக்கும் மேலாக நம்மீது மரியாதை உள்ளவளாக இருக்க வேண்டும். தமிழில் நல்ல அறிவுள்ளவளாக இருக்க வேண்டும்..."

"இந்தத் தகுதிகள் எல்லாம் உள்ள பெண் நம் கட்சியில் இப்போது இருக்கிறாரா? இருந்தால் நமக்கு உடன் கிடைப்பாரா?"

"இருக்கிறாள். ஏற்கெனவே நம்முடன் பணியாற்றிக் கொண்டிருக்கும் ஒரு பெண்மணியின் மகள். பலமுறை கட்சியில் நான் பொறுப்பேற்கக் கூப்பிட்டிருக்கிறேன். அப்போதெல்லாம் வராத அவள், இப்போது தயாராக வந்திருக்கிறாள். இப்போது வருவாள். நீயே பார்."

முதல்வர் ஒரு பொத்தானை அழுத்தினார்.

கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள் விநோதினி.

திடுக்கிட்டு, செயல் இழந்து அமர்ந்திருந்தான் கிருஷ்ணமூர்த்தி.

"வணக்கம்" என்று முதல்வரின் முன் அமர்ந்தாள் விநோதினி.

"உன் வரவு நல்வரவு ஆகட்டும், விநோதினி. இன்று முதல் கட்சியின் மாதர் பிரிவை நீ பொறுப்பேற்கிறாய். இன்னும் அரை மணியில் என் கையெழுத்திட்டு அறிவிப்பு வெளியாகும். கட்சியின் தலைமை அலுவலகத்தில் உனக்கு அலுவல் அறை ஒன்றும், ஏ. சி. செய்யப்பட்ட தனி அறையும் தரச் சொல்லியிருக்கிறேன். இன்றே அலுவலகம் போய் உன் இருக்கையில் அமர்ந்து வேலையைத் தொடங்கு. மாலை எட்டு மணி அளவில் என்னை வந்து சந்தி. இப்போது நீ போகலாம்."

விநோதினி பட்டுப்புடவை மின்னிச் சரசரக்க எல்லோரையும் வணங்கிவிட்டு வெளியே சென்றாள்.

முதல்வர் கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து, வெற்றிப் புன்னகை பூத்தார்.

(தொடரும்)

அப்பாவின் படத்தில் நேற்றுப் போட்டிருந்த மாலை சற்று வாடி, உதிர்ந்திருந்தது. போட்டோவில் அப்பா சிரித்துக் கொண்டிருந்தார். அதிலும் கூட ஓர் உயிரோட்டம் தெரிந்து தன்னை அழைப்பது போன்ற ஒரு பிரமையை உணர்ந்தாள் பானு.

மூன்று நாட்களுக்கு முன்பு வரை வளையவந்த அப்பா இனி இல்லை என்ற உண்மை மனத்தைத் தாக்க, குபுக்கென்று பானுவின் கண்களில் நீர் திரையிட்டது.

''ஆபீஸ் போயிட்டு வரேண்டா கண்ணம்மா!'' என்று செல்லமாக அவள் கன்னத்தில் தட்டி விட்டுச் சென்றவர், அடுத்த இரண்டு மணி நேரத்தில் உயிரில்லாமல் திரும்பிய போது, அடைந்த அதிர்ச்சியிலிருந்து பானுவால் இன்னும் மீள முடியவில்லை.

''நல்லாத்தான் பேசிட்டு இருந்தாரு. திடீர்னு நெஞ்சு வலிக்குது, தண்ணீர் வேணும்னு கேட்டாரு. அவ்வளவுதான். அப்படியே சேர்ல சாய்ஞ்சுட்டாரு. பாவம், எவ்வளவு நல்ல மனுஷன்...'' என்று

# வாழைக் கன்றுகள்



அப்பாவின் உடலுடன் வந்த ஆபீஸ் நண்பர்கள் சொன்ன போது, பானு நம்பவும் முடியாமல், நம்பாமல் இருக்கவும் முடியாமல் பிரமை பிடித்தாற்போல் நின்றாள்.

அம்மா நான்கு வருடங்களுக்கு முன்பே உலகை விட்டுச் சென்று விட, அப்போ திருந்து இதுநாள் வரை அம்மாவைப் பற்றிய ஏக்கமே வராமல் அன்பைப் பொழிந்தவர் அப்பா.

அவர்கள் குடும்பம் அப்பா, அம்மா, மூன்று பெண்கள் என்று கச்சிதமானது. பானுதான் கடைக்குட்டி. மற்ற இரண்டு அக்காக்களுக்கும் அம்மா இருக்கும்போதே கல்யாணமாகிக் குடியும், குடித்தனமுமாக வெளியூரில் இருக்கிறார்கள்.

அப்பாவின் நண்பர் சாம்புதான் தந்தி கொடுத்து அவர்களை வரவழைத்தார்.

''நீ சின்னப் பொண்ணு. அப்பா போயிட்ட துக்கத்துல இருப்பே. கவலைப் படாதே. ஆக வேண்டிய காரியங்களை நான் பார்த்துக்கறேன்...'' என்று சொன்னதோடு மட்டுமில்லாமல், கடைசி வரை உதவியாகவும் இருந்தார்.



நா. பாஸ்கர்

''என்ன பானு, இங்கேயா இருக்கே? அழாதேம்மா. ஹாலுக்கு வாயேன். எல்லோரும் பேசிட்டிருக்காங்க. நீயும் கலந்துண்டா மனசுல உள்ள துக்கமாவது குறையும்...'' என்று சங்கர் அத்திம்பேர் வந்து சொல்லவும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள் பானு.

'இந்த நீலச் சட்டை அப்பாவுக்கு ரொம்பப் பிடிக்கும். ஒவ்வொரு தீபாவளிக்கும் ஸ்கை ப்ளூ கலர் சட்டைத் துணியைத் தான் அப்பா செலக்ட் செய்வார்...' — அறைக்குள் தொங்கிய சட்டையைப் பார்த்ததும் நினைவுக்கு வந்தது.

பானு கூட கிண்டல் செய்வாள், ''அப்பா நீங்க ஒரே சட்டையையே தினமும் போட்டுண்டு வருவதாக ஆபீஸ்ல நினைக்கப் போறாங்க...''

''நினைச்சுட்டுப் போறாங்க போயேன். உங்க அம்மாவுக்கு இந்தக் கலர் ரொம்பப் பிடிக்கும். இந்தக் கலர் சட்டையைப் போட்டுண்டா, அவ எப்பவும் என்னோட இருக்கிற மாதிரி ஒரு ஃபீலிங். அதனாலதான்!'' என்று மிருதுவான குரலில் சொல்லுவார்.

ஹாலில் மூத்த அக்கா கல்பனா பேசிக் கொண்டிருப்பது கேட்டது.

''சுமதிக்கு அடுத்த வாரம் பரீட்சை. நான் பாட்டுக்கு இங்க கூட்டிண்டு வந்துட்டேன். இதுவரை முதல் ரேங்க்குலதான் வந்திண்டிருக்கா. இந்த பரீட்சையிலேயும் வரணுமேன்னு கவலையாயிருக்கு. கணக்குல படு சுட்டி இவ. இவ கிளாஸ் டீச்சரே ஒரு நாள் நேரே வீடு தேடி வந்து எங்களிடம் புகழ்ந்துட்டுப் போனான்னா பார்த்துக்கோயேன்...'' என்று தன் பெண்ணின் பெருமையைப் பீற்றிக் கொண்டிருந்தாள்.

''எனக்குக் கூட வருஷக் கடைசிங்கறதுனாலே லீவு கொடுக்க மாட்டேன்னுட்டார் மானேஜர். விஷயத்தைப் பக்குவமா எடுத்துச் சொல்லி வருவதற்குள்ளே உன் பாடு, என் பாடாயிடுத்து. நான் ஒரு நாள் லீவு போட்டுட்டா எங்க மானேஜருக்கு கை ஒடிஞ்சமாதிரியாயிடும். இதுக்கு நடுவுல காயத்ரிக்கு வேற ஃபீவர்...'' என்று இரண்டாவது அக்கா காயத்ரியின் கணவர் — அத்திம்பேர் பத்ரி தன் பங்குக்குக் கதை யளப்பதும் பானுவின் காதில் விழுந்தது.

''வரும் போது பஸ்ல தூங்கவே முடியலே. வீடியோ பஸ்ஸா, படம் போட்டு அறுத்துட்டான்'' — இது சங்கர் — கல்பனா அக்காவின் ஹஸ்பெண்ட்.

''என்ன படம் அத்திம்பேர்?''

''தில்லுமுல்லுன்னு பாலசந்தர் படம் காயத்ரி''

''ரொம்ப ஜாலியலா இருக்குமே. ரஜினி அதுல மீசையில்லாம நடிச்சுத் தேங்காயை ஏமாத்துவாரே... வயிறு வெடிச்சுடும் சிரிச்சு!''

அவர்கள் பேச்சு, பானுவை ஆச்சரியப் பட வைத்தது.

மூன்றாம் நாளே எப்படி இவர்களால் அப்பா இறந்த துக்கம் மறந்து இவ்வளவு இயல்பாக விஷயங்களை அலச முடிகிறது! தன்னைப் போலக் கல்பனாவுக்கும், காயத்ரிக்கும் மனத்தில் பாரமிருக்காதா?

அத்திம்பேர்களாவது மூன்றாம் மனுஷர்கள். ஆனால் சொந்தப் பெண்களான இவர்களாலும் எப்படி இவ்வளவு சகஜமாக மாற முடிகிறது...?

பானுவுக்குச் சட்டென்று அப்பாவும், தானும் ஒரு மாதத்திற்கு முன்பு பேசியது



# மகளிர் முன்னேற்றத்திற்கு முதல்வர் கலைஞரின் முத்தான திட்டங்கள்



வெளியீடு:
செய்தி-மக்கள் தொடர்புத்துறை
தமிழ்நாடு அரசு.

## பெண்களுக்குச் சொத்தில் சம உரிமை

தமிழகத்தில் முதல் முறையாக பெண்களுக்கு
பரம்பரைச் சொத்தில் சம உரிமை. மார்ச்
திங்கள் 25ம் நாள் முதல் அமலில் உள்ளது.

## வேலை வாய்ப்பில் பெண்களுக்கு 30% இட ஒதுக்கீடு

அரசு அலுவலகங்கள், பொதுத்துறை நிறுவனங்கள்
மற்றும் உள்ளாட்சி மன்றங்களிலுள்ள வேலை
வாய்ப்புகளில் மகளிர்க்கு 30% ஒதுக்கப்பட்டுள்ளது.
பள்ளிகளில் முதல் இரண்டு வகுப்புகளுக்கு மகளிரே
ஆசிரியைகளாக இனி நியமிக்கப்படுவார்கள்

## ஏழைப் பெண்களுக்கு இலவசக் கல்வி

ஈ.வெ.ரா. நாகம்மையார் நினைவு மகளிர்
இலவசக் கல்வித் திட்டத்தின் கீழ் பி.ஏ., பி.எஸ்.சி.,
போன்ற பட்டப்படிப்பு வரை
ஏழைப் பெண்களுக்கு இலவசக் கல்வி.

## படித்த ஏழைப் பெண்களுக்கு திருமணச் செலவு.

மூவலூர் இராமாமிர்தம் அம்மையார் நினைவு
திருமண உதவித் திட்டத்தின் கீழ் எட்டாம்
வகுப்பும் அல்லது அதற்கு மேலும் படித்துத் தேறிய
ஏழைப் பெண்களுக்குத் திருமணச் செலவுக்காக
ரூ.5000/- உதவித் தொகை.

டாக்டர். முத்துலட்சுமி ரெட்டி நினைவு மகப்பேறு உதவித்
திட்டத்தின் கீழ் ஏழைப் பெண்கள் கர்ப்பவதியான
8ம் மாதம் முதல், குழந்தை பிறந்த 2ம் மாதம் வரை
நான்கு மாதங்களுக்கு ரூ.200/- நிதி உதவி பெறுவார்கள்.

DIPR/MS/89/958/MCS/329

ஞாபகம் வந்தது.

இரவுச் சாப்பாடு முடிந்ததும் வெற்றிலை போட வேண்டும் அப்பாவுக்கு. அவரிடமிருந்து வரும் வெற்றிலை, சுண்ணாம்பு கலந்த வாசனை பானுவுக்கு ரொம்பப் பிடிக்கும். இருவரும் மொட்டை மாடியில் அமர்ந்து அவர் ஆபீஸில் நடந்த வேடிக்கையான விஷயங்களைப் பற்றியோ இல்லை ஊர்ச் சமாச்சாரங்களைப் பற்றியோ அரட்டையடிப்பார்கள். தினசரி இரவு சாப்பாட்டுக்குப் பிறகு நடக்கும் கச்சேரி இது. அன்றும் அப்படிப் பேசிக் கொண்டிருந்த போது, திடீரென்று பானுவின் கல்யாணத்தைப் பற்றிப் பேச்சுத் தாவியது.

''உனக்கொரு கல்யாணத்தைப் பண்ணிட்டேன்னா என் கடமை முடிஞ்சுடும் பானு...''

''ஏன் அப்பா என்னை உங்களிடமிருந்து பிரிக்கறதுலேயே குறியாயிருக்கீங்க? நானும் கல்யாணமாகிப் போயிட்டா யாரு உங்களைக் கவனிச்சுப்பாங்க?

''இங்க பாரு கண்ணம்மா, உலகத்துல நாம பிறக்கும் போது கடைசி வரைக்கும் துணையா இருப்பாங்கன்னு யாரையும் நம்பிப் பிறக்கலே. அதோட பெத்தவங்கற கடமை வேற எனக்கிருக்கே!''

''போங்கப்பா. நான் கல்யாணமே செஞ்சுக்கப் போறதில்லே. எப்பவும் உங்களோடவே இருப்பேன்.''

''குழந்தைடா நீ. ஆனா கல்யாணம் மட்டும் ஆயிட்டா அப்புறம் நான் இருக்கற திசையையே மறந்துடுவே!''

''ஏன் இப்படியெல்லாம் பேசறீங்கப்பா?''

''உண்மையைத்தான் சொல்றேன் பானு. உங்க அக்காக்களைத்தான் பார்க்கறேனே. அதுக்காகப் பொண் குழந்தைகளைக் குற்றம் சொல்லவும் முடியாது. தன் கணவன், தன் குழந்தைகள்னு தன்னோட குடும்பத்தைப் பற்றிய எண்ணம்தான் முதல்ல இருக்கும். அப்புறம்தான் அப்பா, அம்மா, அண்ணா, தங்கையெல்லாம். அதைத்தானே சமூகமும் எதிர்பார்க்கறது. உங்க அம்மா அப்படி இருந்ததுனாலதானே என் மேலேயும், குழந்தைகளான உங்க மேலேயும் அன்பைப் பொழிஞ்சா...''

''போங்கப்பா, பேச்சுல உங்களை ஜெயிக்க என்னால முடியுமா?''

''நான் சொல்றது வாதத்துக்காக இல்லைடா. உலக வாழ்க்கை, நடைமுறை வாழ்க்கையைச் சொல்றேன்!'' என்று அப்பா சொன்னது பானுவின் மனத்தினுள் ஓடியது.

வாழையடி வாழையாக வாழ்க்கை அமைந்து சிறக்க வேண்டும் என்று சொன்னதற்கு அர்த்தம் என்ன...?

தாய் வாழையைப் பற்றிக் கன்றுகள் கவலைப்படாமல் தன் வளர்ச்சியிலும், தன்னிடம் பூத்து மொட்டு விடும் காய், கனிகளிடம் மட்டும் கவனம் செலுத்துவதனால் இருக்குமோ...?

'ஒருவேளை எனக்கும் திருமணமாகி வாழ்க்கையில் செட்டிலாகியிருந்தால், நானும் இவர்களைப் போல அப்பாவை நினைத்து இவ்வளவு தூரம் அழுது உருகிக் கொண்டிருக்க மாட்டேனோ...? நல்ல வேளை, எனக்குக் கல்யாணமாகவில்லை. அப்பாவை நினைத்துத் துக்கப்பட நானாவது மிஞ்சியிருக்கிறேனே...!'

சரேலென்று, அப்பாவின் பிரிவால் தனக்கேற்பட்ட தனிமை புரிய, குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தான் பானு.

போட்டியே, ஒரு போடு!






# சங்கீதக் தாத்தாவுக்குச் சதாபிஷேகம்



'செம்மங்குடி'யின் எண்பத்தோராவது ஆண்டு பிறந்த தின விழாவைக் கொண்டாடும் போது, யாரைத் தலைமை வகிக்கச் சொல்லுவது என்று யோசித்தனர், 'எக்ஸ்பிரஸ்' அதிபர் விசுவநாதனும், விழாக் குழுவினரும். தமிழக முதல்வர் கலைஞர் இருக்கிற போது, வேறு யாருக்கு அந்தத் தகுதி இருக்க முடியும் என்று தீர்மானித்து, அவரை அணுகினார்கள். அவருக்கு வேறு நிகழ்ச்சி இருந்ததால் அவரது வசதிக்காகத் தேதியைக் கூட மாற்றத் தயாராக இருந்தார்கள். 'நீங்கள் வைத்திருக்கிற தேதியே இருக்கட்டும். நான் கட்டாயம் வருகிறேன். செம்மங்குடி ஈஸ் இம்பார்டன்ட்!' என்று கலைஞர் சொல்லி, அந்த மற்றொரு நிகழ்ச்சியை ஒத்திப் போட ஏற்பாடு செய்தார்!

'என்ன, நீங்களா! செம்மங்குடி விழாவில் கலந்து கொள்கிறீர்களா!" என்று பலர் ஆச்சரியமாகக் கலைஞரைக் கேட்டார்களாம். கலைஞர் கூறிய பதில்: "இதற்கு ஆச்சர்யப்படுவதைவிட என்னை அழைத்துத் தலைமை தாங்கச் சொல்லுகிறார்களே, அதற்காக ஆச்சர்யப்படுங்கள்!" தஞ்சை மண்ணுக்கே உரிய 'விஷமம்' என்று 'நாரத கான சபா' கிருஷ்ணசுவாமி குறிப்பிட்டது இதைத் தானோ? (விஷமம் அல்ல, குறும்பு என்பது கலைஞரின் திருத்தம்).

"நான் இன்று ஆட்சிப் பொறுப்பில் இருப்பதால்தான் இந்த விழாவுக்கு அழைக்கப்பட்டிருக்கிறேன் என்று யாராவது நினைத்துக் கொண்டால் அது தவறு. எனக்கும் செம்மங்குடி அவர்களுக்கும் ஏற்பட்ட நட்பு இன்று நேற்று ஏற்பட்டதல்ல. நான் பதவியில் இல்லாதபோதும்என்னிடம்பரிவும்பாசமும் காட்டியவர் செம்மங்குடி!" என்றார் முதல்வர். இருபது வருடங்களுக்கு முன்பு, பத்மஸ்ரீ, பத்மபூஷண் பட்டங்கள் கொடுக்க, மத்திய அரசு மாநில அரசைக் கேட்ட போது, பத்மபூஷண் விருதுக்காகத் தாம் பரிந்துரை செய்தவர்களில் அன்றே செம்மங்குடியின் பெயர் இருந்ததைச் சொல்லிவிட்டு, "மாநில அரசை, மத்திய அரசு கேட்கும் வழக்கம் இருந்தது — அப்போதெல்லாம்!" என்றபோது, கலைஞரின் நாசூக்கான குத்தல் வெளிப்பட, சிரிப்பும், கைதட்டலும் கணிசமாகவே இருந்தன.

'செம்மங்குடி — 80' புத்தகத்தின் முன் பக்க அட்டையில் செம்மங்குடியின் படமும், பின் அட்டையில் தஞ்சைக் கோபுரமும் இருந்ததைக் காண்பித்து, "சங்கீத உலகில் செம்மங்குடி தஞ்சைக் கோபுரமாக உயர்ந்து நிற்கிறார்" என்று உருவகப்படுத்தினார் கலைஞர். செம்மங்குடியின் கச்சேரி ஒன்றைப் பேராசிரியர் கல்கி (20.10.33இல்) விமர்சனம் செய்திருந்தார். மற்ற எல்லா அம்சங்களுக்கும் எண்பது, தொண்ணூறு என்று மார்க்குகளை அள்ளிக் கொடுத்து விட்டு, உணர்ச்சிக்குப் பூஜ்யம் போட்டிருந்தார் கல்கி. 'இதில் கல்கியிடம் எனக்குக் கருத்து மாறுபாடு உண்டு. பாடுகிறவர் உணர்ச்சிவசப்படக் கூடாது; கேட்கிறவர்கள்தான் உணர்ச்சிவசப்பட வேண்டும்' என்று கலைஞர் சொன்னதை, யாராவது பட்டிமன்ற சப்ஜெக்டாக வைக்கலாமே என்று சொல்லத் தோன்றுகிறது!

1958 — இல் ஒரு முறை வானொலியில் செம்மங்குடி கரகரப்பிரியா பாடிய போது, அது சரியாக அமையவில்லை என்று சொல்லிக் கொண்டு, அவரைக் காண ஒருவர் மீண்டும் வானொலி நிலையத்துக்கே வந்தாராம். மீண்டும் அதைப் பாடிக் காட்ட முடியுமா என்று கேட்டாராம். 'ஆகா, பேஷாக!' என்றாராம் செம்மங்குடி. பிறருக்கு அசௌகரியமாக இருக்கும் என்று அறைக் கதவைச் சாத்திவிட்டுப் பாடிக் காட்டி, 'இப்போது திருப்திதானே?' என்று கேட்டுத் தெரிந்து கொண்டாராம். அவரது அடக்கத்தையும், பெருந்தன்மையையும், கலைஞர் இந்த நிகழ்ச்சியைச் சொல்லிக் குறிப்பிட்டார். "கோயில் கோபுரத்தில் எத்தனையோ சிலைகள் அழகழகாக இருக்கலாம். ஆனால் உள்ளே இருக்கிற மூல விக்கிரகத்துக்குத்தான் மதிப்பு. அதுபோல், கர்நாடக சங்கீதம் என்கிற கோயிலில், செம்மங்குடி ஓர் இசை விக்கிரகம்!" என்றார் கலைஞர்.

'முன்பெல்லாம் பெரிய வித்துவான்கள் முன்னால் பாடும்போது ஒரு நடுக்கம் ஏற்படும். அதேபோல் இப்போது கலைஞர், நீதிபதி மோகன் போன்றவர்கள் இருக்கிற மேடையில் பேசும் போதும் உண்டாகிறது' என்று செம்மங்குடி சொன்னாலும்,

# பிரதமர் கூறிவிட்டால் வேதவாக்கு!



சமீபத்தில் ரஷ்யாவில் ஒரு பெரிய ரயில் விபத்து நடந்தது. சுமார் ஆயிரம் மக்கள் வரை மாண்டு போனார்கள். அஜாக்கிரதையினால் தீப்பற்றியதில் நேர்ந்த சோகம் இது. இதைப் படித்த போது நெஞ்சம் கனத்தது என்றால், மறுநாள், இதுபற்றி கோர்பச்சேவின் அறிக்கை இதயத்தை நெகிழ வைத்தது. அவர் சொன்னார்:

"நாம் தவறுக்குமேல் தவறு செய்கிறோம். செர்னோபைல் விபரீதம்; அதன் பிறகு நீர்மூழ்கிகள் மோதிச் சேதம்; இப்போது பயங்கர ரயில் விபத்து! நம்மை நாமே திருத்திக் கொள்வோம். இன்னும் விழிப்புணர்வுடன் இருப்போம். நம் திறமைகளை மேம்பாடடையச் செய்வோம். தவறுகளே நேராமல் கவனமாக இருப்போம். இப்படி நாம் ஒவ்வொருவரும் உறுதி மொழி எடுத்துக் கொள்வோம்."

இதற்கு மறுபுறமாகக் கேரளத்தில் நடந்த ரயில் விபத்து, வானிலை ஆய்வாளர்கள் கூடக் கண்டறியாத ஒரு திடீர் சூறாவளியினால் ஏற்பட்டது என்ற ஆய்வறிக்கையை ஒப்பிட்டுப் பாருங்கள்! சிரிப்பதா? அழுவதா?

ஜவஹர் ரோஜ்கர் யோஜனாவுக்கு பட்ஜெட்டில் திட்டமிடப்பட்ட தொகையை விட அதிகமாகச் செலவழிக்கப் போகிறார்கள்! ஏன் தெரியுமா? "மத்திய அரசு 2100 கோடி ரூபாய் செலவழிக்கும்" என்று ராஜீவ் காந்தி ஒரு கூட்டத்தில் அறிவித்து விட்டாராம். பிரதமர் வாக்கு வேதவாக்கு; அதை வாபஸ் வாங்க முடியாது! ஆகையால் நிதி அமைச்சர், அதிகப்படியாகத் தேவைப்படும் 400 கோடிக்கு துணை பட்ஜெட் போட்டு என்ன புது வரி விதிக்கலாம் என்று தாம் யோசித்துக் கொண்டிருப்பதாகத் தெரிவித்திருக்கிறார்!

செல்வம், செல்வத்தைப் பெருக்க வேண்டும் என்பது பொருளாதாரத்தின் முதல் பாடம். சரியான திட்டமிடல் இன்றிப் பணம் வாரி இறைக்கப்பட்டால், பணவீக்கம் அதிகரித்து, மக்கள் சுபிட்சம் அடைவதற்குப் பதில், பெரும் துன்பத்தைத்தான் அனுபவிப்பார்கள். அர்ஜென்டைனா என்ற தென்னமெரிக்க நாட்டில் மக்கள் விலைவாசி உயர்வு காரணமாக ரொட்டி கூட வாங்க முடியாமல் கடைகளைக் கொள்ளையடிக்க ஆரம்பித்து விட்டனர்! அவர்களைக் கட்டுப்படுத்த ராணுவத்தை ஏவ வேண்டியிருந்தது. நம் தலைவர்கள் இந்தச் சமீபத்திய நிகழ்ச்சியை அறிந்ததாகவோ அப்படி அறிந்தாலும் அதில் ஒரு பாடம் இருப்பதாக உணர்ந்ததாகவோ தெரியவில்லை!

— கேயார்

---

வழக்கம் போல நடுங்காமலே பேசினார். 'இசைக்கு மொழி அவசியமில்லை. ஆனால் மொழிக்கு இசை அவசியம்' என்று கலைஞர் சொன்னதை நினைவுகூர்ந்து பாராட்டினார்.

காஞ்சிப் பெரியவரைச் சென்ற மாதம் பார்த்து ஆசி பெறச் சென்றாராம் செம்மங்குடி. "நீ சங்கீதத் தாத்தாடா!" என்று வாழ்த்தினாராம் பரமாச்சார்யாள். "உ. வே. சாமிநாதய்யர் தமிழ்த் தாத்தா என்றால், நீ சங்கீதத் தாத்தா!"

○ இந்த விழாவில் ஒரு விசேஷம், எல்லாரும் தமிழிலேயே பேசினார்கள். தொழிலதிபர்கள் சுரேஷ் கிருஷ்ணா, டி. டி. வாசு உட்பட!

○ ஒவ்வொருவர் பேசும் போதும், கைக் கடிகாரத்தைக் காட்டி, ஏவிஎம் சரவணனிடம் கமெண்ட் அடித்துக் கொண்டிருந்தார் நேரத்தில் குறியாய் இருக்கும் வாசு.

○ ஒரு நிகழ்ச்சியில் 'போய்விட்டு வருகிறேன் யுவர் ஆனர்' என்று நீதிபதி மோகனிடம் விடைபெற்றுக் கொண்டாராம் செம்மங்குடி. 'போய் வாருங்கள், யுவர் மெஜஸ்டி!" என்றாராம் மோகன். 'அவர் சங்கீதச் சக்கரவர்த்தி ஆயிற்றே!'

○ தாம்பரத்தில் டிடிகே வசித்து வரும் போது, செம்மங்குடி அங்கே அடிக்கடி வந்து பாடுவாராம். அங்கே அருகே உள்ள கோயிலுக்கு இருவரும் செல்வதுண்டாம். அது தியாகராஜசுவாமிகள் வழிபட்ட கோயில் என்றார் வாசு.

○ செம்மங்குடிக்கே தெரியாமல் அவரது சென்ற வருட அகாடமி கச்சேரியை வீடியோ செய்துவிட்டு, அவர் முன்னாலேயே அதை வெளியிடக் கொஞ்சம் துணிச்சல் வேண்டும். அதை டி. டி. வாசு, "இது திருட்டுத்தனமாகச் செய்த கேசட். குருஜிக்கே கூடத் தெரியாது!" என்று ஒப்புக் கொண்டது பெருந்தன்மை.

○ விழாவின் சிகரமாக, எம். எஸ்ஸின் கச்சேரி — ரசிகர்களைச் சொக்க வைத்தது.

— நமது நிருபர்.








200 ரூபாய் கொடுத்து 5,500
ரூபாய் மதிப்புள்ள உயர்ந்த
[illegible]
நகைகள் வாங்குவது எப்படி?

மேலும் 5000 ரூபாய் மதிப்புள்ள
நகைகள் பரிசாகப் பெறுவது எப்படி?



திட்டத்தில் ஒவ்வொரு மாதமும்
200 ரூபாய் கட்டி 25 மாதங்களுக்குப்
பிறகு 5,500 ரூபாய்க்கு நகைகள் பெறுவீர்

[illegible]

## போனஸ் நகை! 26-வது மாதம்

200 உறுப்பினர்களில் 85 பாக்கியசாலிகள்
'லக்கி டிப்' முறையில் தேர்ந்தெடுக்கப்படுவீர்

| | |
|---|---|
| முதல் ஐந்து பேர் | Rs. 5000 மதிப்புள்ள நகைகள் பெறுவீர் |
| இரண்டாம் பத்து பேர் | Rs. 2,500 மதிப்புள்ள நகைகள் பெறுவீர் |
| மூன்றாம் இருபது பேர் | Rs. 1,250 மதிப்புள்ள நகைகள் பெறுவீர் |
| நான்காம் ஐம்பது பேர் | Rs. 500 மதிப்புள்ள நகைகள் பெறுவீர் |

# M. Sreenivasulu Chetty

**JEWELLERS & DIAMOND MERCHANTS**

AC-1, SHOP NO.1, SECOND AVENUE, ANNA NAGAR, MADRAS-600040.
Tuesday Holiday (Near Sri Iyyappan Temple) Ph: 618781.

SASI

# என் உயிரத் தோழன்

**அத்தியாயம் 9**

**நாயகன் இல்லாத நாடகம்!**

தென்னவன் நடக்க ஆரம்பித்தான். கொட்டகைக்கு நடந்தே போய்விடலாம். பீடாவின் சாறு, தொண்டையில் இறங்கிக் கொண்டே இருந்தது. அதைத் துப்ப அவன் விரும்பவில்லை. மென்று கொண்டே நடந்தான். இன்னும் சில அடிகள் நடந்தால் போதும் சந்தனத்தேவன் பட்டியின் பிரசித்தி பெற்ற வீரப்ப அய்யனார் கோயில் வந்துவிடும். கோயிலைத் தாண்டும்போது சிறுவர்களின் குரல் தடுத்து நிறுத்தியது.

வழக்கமான அழைப்பு. பழகிவிட்ட உரிமையில் அவனை நெருங்கி வந்து நின்றனர். கையில் தேங்காய். அதன் மீது சூடம். சூடத்தை உடனே ஒருவன் கொளுத்தினான்.

"உங்களுக்குத் திருஷ்டி சுத்திப் போடணும்! ஆடாம அசையாம அங்கேயும் இங்கேயும் பார்க்காம அப்படியே நில்லுங்க...

தென்னை மரத்தின் பின்னால், சட்டென, மான் போல மறைந்தது சிட்டுவின் முகம்.

தென்னவன் துல்லியமாய்க் கவனித்திருந்தான். அவன் காட்சிகளை மனத்திரையில் வெட்டி ஒட்டிச் சிட்டுவைப் பற்றி ஒரு முடிவுக்கு வந்தான்.

பல்குச்சியில் ஆரம்பித்து, பீடா வரை நடந்துள்ள விஷயங்களின் பின்னணி தெரிந்தது.

'எனக்கு யாரும் உறவுன்னு இல்லே பாட்டி. நான் ஓர் அனாதை!'

தென்னவனை அவன் சொன்ன வார்த்தைகள் ஒரு முறை தீண்டின.

"உங்களுக்குத் திருஷ்டி நெறையச் சேர்ந்திருக்கு! வீரப்ப அய்யனார் சாமி முன்னால சுத்திப் போட்டா எல்லாம் முறிஞ்சு போயிடும்...!"

மரத்தின் பின்னாலிருந்து, சிட்டுவின் குரலும் அவர்களோடு சேர்ந்தது போலிருந்தது.

இது பிரமையா.... உண்மையா...?

தேங்காயைச் சுற்றித் திருஷ்டி கோஷங்களைச் சொந்தச் சரக்குகளோடு சேர்த்துச் சொல்லிப் போட்டு உடைத்தனர். சில்லுகள் சிதறின.

"எல்லாத் திருஷ்டியும் இறங்கி ஓடிடுச்சு!" ஒரு சிறுவன் சொன்னான்.

"இனிமே நான் அனாதை இல்லே...!" தீர்மானமாய்ச் சொல்லிவிட்டு நடந்தான் தென்னவன். சிட்டுவுக்கு அருவியில் நனைந்தது போல் இருந்தது.

'இனிமே நான் அனாதை இல்லே!'

அவன் உறவை உச்சரித்துச் சொன்ன மேன்மை, அவளுக்குப் பிடித்திருந்தது. ஆனால் அது என்ன வகையான உறவு? எப்படிப்பட்ட உறவு? விடுகதை போட்டது போல் பேசிவிட்டுப் போய்விட்டானே என்று அவள் யோசித்தாள்.

தானும் இதுநாள் வரை அனாதையாக இருந்தது போலவும், திடீரென்று தனக்கும் ஓர் உறவு உருவாகி விட்டது போலவும் உணர்ந்தாள்.

'இனிமே நான் அனாதை இல்லே... சிட்டு!'

தன் பெயரைச் சேர்த்து அவன் அதைச் சொன்னது போல் நினைத்தாள். சிரித்துவிட்டாள். மனத்தில் அப்போது கனவு சமிக்ஞை செய்வதுபோல் இருந்தது.

"அக்கா... அவரு சிரிச்சிக்கிட்டே போறாருக்கா... அவரு அனாதை இல்லையாங்க்கா!"

"ஆமாண்டா...! என்னையே தம்பியாக்கிக்கணும்னு அவருக்கு ரொம்ப நாள் ஆசை. அதான் அப்படிச் சொல்லிட்டுப் போறாரு! சரி... இருந்துட்டுப் போவட்டும்!" என்று ஒரு சிறுவன் முந்திக் கொண்டு சொன்னான்.

"ஆமா... இவரு பெரிய ராசாவோட பேரன்...! இவரைத் தம்பியாக்கிக்கிட்டாத் தங்கத்தால இழைச்சிப் போட்டுக்கலாம்னு அவருக்கு ஆசை... போடா...!" என்றான் இன்னொருவன்.

சிறுவர்களின் கிண்டல் சிட்டுவை எட்டவில்லை.

"அக்கா... அவரு சொன்னது எங்களுக்கா...! இல்லே உங்களுக்கா?"

சிட்டு வெட்கப்பட்டாள்.

"டேய்! அக்கா வெக்கப்படுது... விட்டுடுங்கடா!"

சிட்டு அவர்களை விரட்டினாள். பின் தென்னவன் போன திசையைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

கோயில் குரங்குகள், உடைந்து கிடந்த தேங்காய்ச் சில்லுகளைச் சாப்பிட்டுக்

பாரதிராஜா

கொண்டிருந்தன.

"அக்கா... தென்ன மரத்தாண்டயே நின்னுக்கிட்டிருக்காதே! தேங்கா கிங்கா தலையில விழுந்துடப் போவுது...!"

மெல்லியதாய்ச் சிறுவர்கள் குரல் கேட்டது.

அன்று இரவு நாடகத்திற்கான கைதட்டல் சத்தம் கேட்க ஆரம்பித்தது.

முதல் நாளைவிடக் கூட்டம் இப்போது அதிகமாகி இருந்தது. அக்கம்பக்கத்து ஊர்களில் இந்த நாடகத்தைக் கேள்விப்பட்டுக் கூடிய ஜனம் வேறு!

சிட்டு நாடகத்திற்குச் செல்ல, ஆர்வத்துடன் அப்பாவைக் கூப்பிட்டுப் பார்த்தான்.

"நீ உன் சிநேகிதி தாமரை கூடப் போயிட்டு






## எதிர்பார்த்ததைவிட எக்கச்சக்க திருப்தி!

○○ காஞ்சி முனிவரின் ஆசி கூறும் படமும், காஷ்மீரின் நெஞ்சை அள்ளும் இயற்கைக் காட்சிகளும், எத்தனை முறை படித்தாலும் குபீர்ச் சிரிப்பை வரவழைக்கும். அமரர் கல்கியின் "பூரி யாத்திரை" கட்டுரையும் மற்றும் பல சிறு கதைகளையும் பயனுள்ள செய்திகளையும் கொண்ட கல்கி விடுமுறை மலர், பத்து ரூபாய்க்கு இவ்வளவு விஷயங்களா என்று ஆச்சர்யப் படவைத்தது!

சென்னை — 33, வி.எஸ். வாசன்.

○○ திரையுலகமே போற்றும், நடிகர் திலகத்தின் நடிப்பார்வத்தை வியட்நாம் வீடு சுந்தரத்தின் கட்டுரையின் மூலம் முழுமையாய் அறிந்தேன்.

இப்படிப்பட்ட ஒரு நடிகரை நம் தமிழகம் பெற்றதற்காக, ஒவ்வொரு தமிழனும் பெருமை கொள்ளலாம்!

மதுரை — 20, பி.என்.கே. ரவிராஜன்.

○○ சிறுகதைகள் அனைத்தும் அருமை. அமரர் கல்கியின் "பூரி யாத்திரை" கலகலக்க வைத்தது. ஆக அடுத்த விடுமுறை மலர் வரும் வரை — நெஞ்சில் நிறைந்து நிற்கும் படியான பொக்கிஷமாக, வீட்டில் உள்ள அனைவரும் படிக்கலாம். பாராட்டுக்கள்!

ஈரோடு — 1, ரேவதிப்ரியன்

○○ புகழ் பெற்ற புகைப்படங்களைப் போட்டு, எங்களை அசத்தி விட்டார்கள். ஒவ்வொரு படமும் சூப்பர். பலமுறை இரசித்து விட்டேன். இன்னும் இரசித்துக் கொண்டிருக்கிறேன்!

சென்னை — 57, எம். ராமராஜ்.

○○ பத்தொன்பது சிறுகதைகளும் அருமை. இரு குறுநாவல்களும் தித்தித்தன. 'மதில் மேல் மாது' நாடகம் சிரிக்க வைத்தது. கண்ணைக் கவரும் வண்ணப் படங்கள் கருத்தைக் கவரும் கட்டுரைகள். அமரர் கல்கியின் பூரி யாத்திரைக் கட்டுரை, ஜோக்குகள், துணுக்குகள் இவற்றால் 'முத்து மாலையுடன் வைரம் பதித்தது போல் விடுமுறை மலர் ஜொலித்தது.

சமத்தூர், என். கனகராஜன்.

○○ கல்கி விடுமுறை மலரை எதிர் பார்த்ததை விட எக்கச்சக்கமான திருப்தியுடன் வெளியிட்டமைக்கு வாழ்த்துக்கள்.

ராஜபாளையம், கே.கே. உதயா ராம்ராஜ்.

○○ கல்கி ஆசிரியர் குழு இப்படி ஒரு மலரை வெளியிட யோசனை செய்ததே... அதுவே ஒரு பெரிய வரப் பிரசாதம். இது உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை.

சென்னை — 106, மாயன்.

வந்துடும்மா! எனக்கு நெறையப் படிக்க வேண்டி இருக்கு. நீ போ...!"

அப்பா வராதது அவளுக்கு மிகவும் சந்தோஷம். உற்சாகத்துடன் பார்க்கலாம். கைதட்டலாம். சிரிக்கலாம். தாமரையிடம் மனந்திறந்து பேசலாம்...

அதே கிருஷ்ணன் வேடத்தில் தென்னவன். சிட்டுவுக்கு அவன் முதல் நாளைவிட இன்று புதிதாய்த் தெரிந்தான். பிரகாசித்தான். கூட்டத்தின் கைதட்டல் நின்றும் கூட அவள் கைதட்டல் கேட்டுக் கொண்டே இருந்தது!

அவள் கற்பனைக் கனவுகளில் அவன் தன்னோடு பாடுவது போல் அவளுக்கு இருந்தது. கனவில் இது ஒரு வசதி. அங்கே கூட்டம் வராது. தொந்திரவு இல்லை. தனக்கும் அவனுக்கும் மட்டுமே ஒரு பந்தம். ஆளைக் கிறங்க வைக்கும் ஓர் அந்தரங்கம்.

சட்டென நிஜத்திற்கு வந்தாள். நாடகம் இன்னும் ஆரம்பிக்கவே இல்லை. கூட்டம் 'சத்த சந்தையாகி' இருந்தது.

ராஜபார்ட் தாம் பிரம்மாண்டமாய்ப் பாடி இதர அயிட்டங்களைச் சேர்த்து, 'புது விஷயங்களோடு சந்தனத்தேவன் பட்டியைச் சமாதானப்படுத்திச் சந்தோஷம் ஏற்படுத்தி விடலாம் என முடிவு செய்தார்.

அவரின் மொத்த உடலும், மனமும் ஓர் இளைய வேகத்துடன் தடுமாறிக் கொண்டிருந்தது. ஸ்திரீபார்ட் முகத்தில் வழக்கமான வெட்கம் வடிந்தது.

மேடையில் விளக்குகள் எரிந்தன. சம்பிரதாய இசை. ராஜபார்ட் இறக்குமதியானார். உச்சஸ்தாயிக்குப் போனார்.

கூட்டம் அவரை ஒத்துக் கொள்ளவே இல்லை. "நீ உள்ளே போ... தென்னவனை வரச் சொல்லு...!" கத்தினர்.

ராஜபார்ட் முகத்தில் குழப்பம் கூடி இருந்தது. அவருக்கு மக்களின் ஆர்வமும், ஆரவாரமும் புரிந்தது.

'நின்று' பேசிப் பார்த்தார். பாடித் தீர்த்தார்.

மக்கள் ஒரே மூச்சில் இருந்தனர்.

"நேத்து நடிச்சவரை வரச் சொல்லு!"

"அய்யா பெரியவரே, நீங்க உள்ளே போயி உட்காருங்க! தென்னவனை வரச் சொல்லுங்க!"

ராஜபார்ட், மக்கள் ஓட்டெடுப்பில் தாம் மெல்ல மெல்ல மெஜாரிட்டி இழந்து வருவதைப் புரிந்து கொள்ள ஆரம்பித்தார்.

இன்னும் கொஞ்சம் போனால் கல்வெறிதல் கூட நடக்கும். அது தம்மை மட்டுமல்ல, மேடையைக் கூடச் சேதப்படுத்திவிடலாம். இனி தொடர்ந்து நாடகம் நடத்த முடியாது என்பதும் அவருக்குத் தெரிந்தது.

கொஞ்சம் அமைதியாக இருக்கும்படி அறிவிப்பு வந்தது. கேட்டுக் கொள்ளப்பட்டது.

அதற்கு யாரும் கட்டுப்படவில்லை.

சிட்டு ஏமாற்றப்பட்டு விட்டது போல் உணர்ந்தாள்.

ராஜபார்ட்டே மைக்கில் கேட்டுக் கொண்டார்.

கூட்டத்தில் ஏமாற்றத்தின் சலசலப்பு இருந்தது. கொஞ்சம் பேர் நடக்கிற நாடகத்தைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்பது போல் உட்கார்ந்திருந்தனர்.

மறுநாள் காலை நாடக வண்டிகள் மூட்டை முடிச்சுக்களுடன் வந்த வேகத்திலேயே வேறு ஊரை நோக்கிப் போய்க் கொண்டிருந்தன. புழுதி மெல்லப் பரவியது. 'அற்ப ஆயுசில்' அவர்கள் விஜயம் முடிந்து போவது பலருக்கு வருத்தமாக இருந்தது.

சிட்டு வீட்டு மூலையில் கலக்கத்துடன் மேட்டு வளையைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

ராஜபார்ட் தமிழ்முரசுவிடம் புறப்படுவதைப் பற்றிச் சொல்ல வந்திருந்தார். இருவருமே கண்கலங்கி விட்டனர்.

''உங்ககிட்டே இருக்கிற தொழிலுக்கு எங்கே போனாலும் நல்லா இருப்பீங்க... நாலைஞ்சு இளவட்டங்களைக் கூட மாட வச்சிக்குங்க! அவுங்க இருந்தாத் தப்பில்லையே! அவுங்களையும் வளத்து விடுங்க. உங்களுக்குள்ளே என்ன நடந்துதுன்னு நான் கேக்குறது நாகரிகமில்லே! உங்களுக்கு என்ன வேணும், எது வேணும்னாலும் வாங்க... என்னால முடிஞ்சதைச் செய்யறேன்!''

ராஜபார்ட் யோசித்தார். காலையில் தென்னவனுக்கும் அவருக்கும் ஒரு பிரச்னை நடந்து முடிந்திருந்தது. தென்னவன் வேலையை விட்டுப் போய் விட்டான்.

''தென்னவா...! உனக்குச் சம்பளம் இருபது ரூபாதான்... அதுக்கு மேலே குடுக்க முடியாது! மேடையிலே பாடிட்டேங்கிறதை வச்சி நீ உன்னை உசரமா நெனைச்சுக் காதே! அதுக்கு நாங்க பொறுப்பாக முடியாது!''

அய்யா... நான் வேஷம் போட்டதால கேக்கலே! ஏற்கெனவே ரொம்பக் காலமா நான் கூட்டித் தாங்கன்னு கேட்டுக்கிட்டிருக்கேன். நீங்க தர்றேன்னு சொல்லிக்கிட்டிருக்கீங்க... பகல்ல தொண்டைத் தண்ணி போக 'மைக்'கைப் புடிச்சிக்கிட்டுக் கத்தறேன். ராத்திரியில வேர்வைத் தண்ணி வடிய மேடையைச் சுத்தி உழைக்கிறேன். அதான் கேக்கறேன்!''

''மொத்தப் பேரும் சொல்றதைக் கேட்டுக்கிட்டுச் சத்தம் போடாம இருக்காங்க... நீ மட்டும் முடுக்கி விட்டாப்பல பேசிக்கிட்டிருக்கே! நீதான் தாங்கற மாதிரி நெனைச்சிக்கிட்டு தலைக்கனத்தோட பேசறே இல்லே...?''

— ராஜபார்ட்டைப் பேசச் சொல்லி ஏற்கெனவே சிலர் சுருதி ஏற்றி இருந்தனர்.

சுருதி அபஸ்வரமாய் ஆகிக் கொண்டிருந்தது.

தென்னவன் தெம்புடன் பேசினான்.

''அய்யா, கைவிருக்கிறவன் எங்கே வேணாலும் கரணம் போட்டுக்குவான்! எனக்குச் சேர வேண்டியதைக் குடுத்துடுங்க... என்



# கல்கி மாணவர் சிறப்பிதழ்

புதிய கல்வி ஆண்டு தொடங்குவதையொட்டி, கல்கி ஜூலை 2 இதழ், மாணவர் சிறப்பிதழாக மலர்கிறது!

நீங்களும் இதில் பங்கேற்க வேண்டாமா? நீங்கள் மாணவராகவே இருந்தால் ரொம்ப நல்லது. இல்லையெனில் மாணவப் பருவத்தை நினைவுகூர்ந்தும் எழுதலாம். பின்வரும் அம்சங்களில் உங்கள் அனுபவங்களை எதிர்பார்க்கிறோம்:

1. **உடல் ஊனமுற்ற மாணவ நண்பர்.**
2. **வேலை செய்து சம்பாதித்தபடியே படிப்பைத் தொடர்வது.**
3. **'ராகிங்'**
4. **கல்லூரி ஜோக்ஸ்**
5. **அட்மிஷன் அனுபவம்.**
6. **மாணவர் தலைவர் தேர்தல்.**
7. **முதல் நாள் அனுபவம்.**
8. **கல்லூரியில் காதல் மற்றும் ஆண் பெண் நட்புறவு.**
9. **ஸ்போர்ட்ஸ் — ஆர்வம் அல்லது ஆர்வமின்மை.**

ஒன்பது தலைப்புக்களில் ஒன்று பற்றியாவது எழுத முடியாமலா போய் விடும்? உடனே எடுங்கள் பேனாவை! நேரம் அதிகமில்லை. **முடிவு தேதி ஜூன் 19!**

சுருக்கமான, ரசமான அனுபவங்கள் பிரசுரமாகி ரூ. 25/— பரிசு பெறும்.

உறை மீது அல்லது தபால் கார்டின் மீது, ''மாணவர் சிறப்பிதழ்'' என்று குறிப்பிடவும்.

## பங்கேற்க அழைக்கிறோம்!



கணக்கைத் தீர்த்துடுங்க! நான் என் பாட்டுக்குப் போறேன்!''

ராஜபார்ட் உடனே அவனை வெட்டிவிட முடிவு செய்தார்.

அங்கே ஏற்பட்டிருந்தது தலைமுறை இடைவெளி. ஒருநாள் ஹீரோ பதவி பெற்று உடனே இறக்கப்பட்டு விட்டான் தென்னவன்.

காலையில் குளித்துவிட்டுச் சந்தோஷமாக வந்தபோது இன்றோடு இங்கே தலைமுழுக வேண்டி இருக்கும் என்று அவன் நினைத்திருக்கவில்லை.

''நான் சொல்றது சரிதானுங்களே...'' தமிழ்முரசு சொன்னபோது ராஜபார்ட் நினைவுக்கு வந்தார். சட்டென நிதானித்துக் கொண்டு அவர் சொன்னதை ஆமோதித்தார். பின் விடைபெற்றுக் கொண்டார்.

**வெ**ளியே அப்பா பேசியது சிட்டுவுக்குப் பிடிக்கவில்லை.

முதல் நாள் கலகலப்பாக விருந்து நடந்த வீடு இப்போது வெறிச்சோடி இருப்பது போல் அவளுக்கு இருந்தது.

அவரை அனுப்பிவிட்டு உள்ளே வந்த தமிழ்முரசு மகளிடம் சொன்னார்:

''சிட்டு... இவருகிட்ட நான் நடந்தது என்னன்னு கேக்கலியே தவிர, என் காதுக்கு விஷயம் வந்து விழுந்திடுச்சு! கூலியைக் கூட குடுங்கன்னு அந்தப் பய கேட்டிருக்கான். எல்லாருக்கும் ஒரே சட்டம். உனக்குன்னு ஒண்ணும் மாத்திக்க முடியாதுன்னிருக்காரு. அவரு... பாரும்மா! அந்தப் பய திமிர் புடிச்ச பயலா இருந்திருக்கான்! சரின்னு ஒத்துப் போயி இருந்திருக்க வேணாம்... உடனே சம்பாரிக்கணும்னு ஆசைப்பட்டா எப்படி! மேடையிலே ஓரமா நின்ன பயலை வெளிச்சத்துல சனங்க முன்னால நிறுத்தினதே அவருதானே! அதுக்கு நன்றி வைக்க வேணாம். வேலையை விட்டுப் போனவன் இந்த வெவரங்கெட்ட பயாஸ்கோப்காரனோட பேசிக்கிட்டிருந்தானாம். இவரு ஒரு அறிஞரு. அவரு ஒரு ஞானி பாரு... பேசி இருக்காங்க! பாவம், இவனால ராஜபார்ட்டுக்கு மனக்கஷ்டம்.''

''சரி, வயசுல பெரியவருதானே ராஜபார்ட்டு! அவரு சமாதானமாப் போனாத்தான் என்ன?''

தென்னவனுக்கு ஆதரவாக அவள் மனம் நினைத்தது.

பளீரென உணர்வுகளைப் பாய்ச்சிவிட்டு எங்கே போய்விட்டான் அந்தக் கிருஷ்ணன், இல்லை தென்னவன். கண்ணன் வேஷம் போட்டாலே மாயமாகி விடுவார்களோ! அப்படியென்றால் 'நான் அனாதை இல்லை' என்று அவன் சொன்ன வார்த்தைகள் அர்த்தமில்லாததா...?

சிட்டுவுக்குள் ஒரு 'கேள்வி யாகமே' நிகழ்ந்து கொண்டிருந்தது.

(தொடரும்)

## ஒரு குழந்தைக்காக...

கர்நாடக மாநிலத்தில் பீஜிசோரு கிராமத்தைச் சேர்ந்த ஓம் பிரகாஷ் — காயத்ரி தம்பதிக்கு ஆறு வருடங்களாகக் குழந்தையே இல்லை. இதனால், காயத்ரியை அவளுடைய உறவினர்கள் துன்புறுத்த ஆரம்பித்தனர். சில மாதங்களுக்கு முன் பெங்களூர் வந்த காயத்ரி ஒரு ஸ்பெஷலிஸ்டிடம் தன்னைச் சோதித்துக் கொண்ட போது அவளால் குழந்தை பெற இயலாது என உறுதியாயிற்று.

இந்த உண்மையை மறைத்து, காயத்ரி, தான் கர்ப்பமாக இருப்பதாகக் குடும்பத்தினரிடம் பொய் கூறினாள். அதே சமயத்தில் கணவரிடம் சண்டை போட்டுக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறி விட்டாள். பிறந்து ஓரிரு நாட்களே ஆன குழந்தை ஒன்றைத் தத்து எடுத்துக் கொள்ளப் பல அனாதை ஆசிரமங்களுக்குச் சென்றாள். பலன் இல்லை.

கடந்த மே மாதம் பதினெட்டாம் தேதி ஒரு டாக்டரின் உடையில் முனிசிபல் ஆஸ்பத்திரிக்குச் சென்று, பிறந்து ஒரு நாளே ஆகியிருந்த ஓர் ஆண் குழந்தையை யாருமறியாமல் கடத்தி வந்து விட்டாள். கிராமத்துக்குத் திரும்பி அக்குழந்தை தனக்குப் பிறந்ததாகத் தனது குடும்பத்தாரிடம் பொய் கூறினாள். ஆனால், குட்டு வெளிப்பட்டு போலீஸார் அவளைக் கைது செய்தனர். குழந்தையும் தனது உண்மையான அம்மாவிடம் போய்ச் சேர்ந்து விட்டது!

நன்றி: 'டெக்கான் ஹெரால்ட்'

— கே. ஜி. எஃப். பழனிச்சாமி.



●● மேனகா காந்திக்குப் பிடித்த பொழுது போக்கு தோட்டத்தில் பலவித மரம் செடி கொடிகளைப் பயிரிடுவதுதான். எந்த ஊருக்குப் போனாலும் அங்கிருந்து சில மரக் கன்றுகளைக் கொண்டு வந்து விடுவார். சமீபத்தில் கேரளா சென்றிருந்த அவர் திரும்பி வந்தபோது இரு பாதாம் செடிகள், இரண்டு தென்னங் கன்றுகள், ஒரு பலாக்கன்று, மிளகுக் கொடிகள் முதலியவற்றைக் கொண்டு வந்து தமது டில்லி தோட்டத்தில் நட்டிருக்கிறார். ''எனது தோட்டம் ஒரு மினி பாரதம்'' என்கிறார் மேனகா!

— விக்கி.




திரும்பின பக்கமெல்லாம் கலைஞர் நம்மைப் பார்த்துப் 'பளிர், பளிர்' என்று சிரித்துக் கொண்டிருக்க, முதல்வரின் அறுபத்தாறாவது பிறந்த நாள் போஸ்டர் பெருவிழாவாக அமர்க்களப்பட்டது!

'இத்தனை பப்ளிசிடி அவசியமா?' என்றால், 'அவருக்கு வேண்டப்பட்டவர்கள் அன்பு மிகுதியால் போஸ்டர் ஒட்டுகிறார்கள், நீ ஏனய்யா வயிறு எரிகிறாய்?' என்ற பதில்தான் கிடைக்கும். அது நியாயமான பதிலாகவும் இருக்கும். உள்நோக்கம் ஏதுமின்றிச் செலவிடப்பட்ட பணமென்றால் சரி, சந்தோஷம்.

போட்டி போட்டுக் கொண்டு போஸ்டர் ஒட்டியதில் ஒருவருக்கு ஒட்ட இடமே கிடைக்காமல் போக, சினிமா பானர் ஒன்றின் கீழ்ப்பகுதியில் ஒட்டி விட்டார்! நிகர விளைவு: கட்டிலில் சல்லாபமாக இருக்கும் காதலர்களைப் பார்த்தும் பாராதது மாகக் கலைஞர் சிரிப்பது போல் ஒரு தோற்றம்! நகைச்சுவை உணர்வோடு எடுத்துக் கொண்டால் இதுவும் ஒரு பிறந்த நாள் தமாஷ்தான்.

முதல்வரின் பிறந்தநாள்:

# போஸ்டர் பெருவிழா!

நகைச்சுவை என்று நினைத்துத்தான் உளறினாரோ அல்லது நிஜமென்று நம்பித்தான் பேசினாரோ, பொதுக் கூட்டத்தில் எஸ். எஸ். சந்திரனின் பேச்சு, திருஷ்டி பரிகாரம். உடன்பிறப்புக்களைப் பார்த்து, 'பொறுங்கள், நகராட்சித் தேர்தல்கள் முடியட்டும், நாடாளுமன்றத் தேர்தல்கள் முடியட்டும்; அப்புறம் ஒரு கை பார்க்கலாம்!' என்று அவர் சொன்னது அசிங்கம்தான் என்றாலும், ஒரு விதத்தில் அதுவே நல்லதாயிற்று! ஏனெனில் அவர் அப்படிப் பேசியதால்தானே கலைஞர் உகப்பி விடப்பட்டவராகச் சீறினார்! 'யாருக்காவது சலுகைகள் பெற முடியும் என்ற ஆசையிருந்தால் அவர்கள் கட்சியிலிருந்தே வெளியேறி விடலாம்' என்று கண்டிப்புக் கறாராகப் பேசினார்! 'இது கட்சியின் ஆட்சியே தவிர, கட்சிக்கான ஆட்சியல்ல' என்று ஆணி அறைந்தாற்போல் கூறினார்!

'கருணாநிதி என்ற பெயருக்கேற்பக் கருணை பெருக்கெடுக்கிறது' என்று சஞ்சீவ ரெட்டி கூறிய போதிலும், அந்தக் கருணை, கட்சிக் கண்ணோட்டத்தில், நேர்மையற்ற முறையில் செயல்படாது என்று மக்களுக்கு உத்தரவாதம் அளித்ததாகி விட்டது, கலைஞரின் பேச்சு. இனி இந்த நிலையிலிருந்து அவர் பின்வாங்கவே முடியாதபடி சிக்குண்டிருக்கிறார்.



கலைஞரின் பிறந்த தினத்தையொட்டி வழக்கம் போல் நிறைய 'கலெக்ஷன்' நடந்தது. ஆனால் இன்று அவர் ஆட்சிப் பொறுப்பில் இருப்பதால், அதிகாரிகளைக் கொண்டு பைசா பிசகாமல் எண்ணி வைத்து அவ்வளவையும் மக்கள் துயர் துடைப்புக்கான முதல்வரின் நிதியில் (அதிகார பூர்வமானது) சேர்க்கச் செய்திருக்கிறார்.

சுதந்திரம் பெற்று நாற்பத்து இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. இன்றைக்கும் ஒரு முதல்வர், 'தமிழகத்தின் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்த்து வைப்பேன்' என்று தமது பிறந்த நாளையொட்டி வாக்குறுதி அளிக்க வேண்டியிருக்கிறது என்றால், அது எவ்வளவு வெட்கக்கேடான விஷயம்! இனி, எதிர்காலத்தில் எந்த முதல்வருக்குமே இப்படி ஒரு தர்மசங்கடம் நேர இடமில்லாத அளவில், இன்றைய முதல்வர் குடிநீர்ப் பிரச்னைக்கு நிச்சயம் நிரந்தரத் தீர்வு கண்டு விடுவார் என்று தமிழகம் நம்புகிறது.

எல்லாம் சரி; 'எங்கும் தமிழ், எதிலும் தமிழ்' என்று ஒரு பக்கம் முழங்கிக் கொண்டே, இன்னொரு பக்கம் நம் தலைவர்கள் பிறந்தநாள் கேக் வெட்டுவானேன்? இட்டிலி வெட்டக் கூடாதா? அல்லது இனிப்புத்தான் வெட்டவேண்டும் எனில், கோதுமை அல்வா? மைசூர் பாக்?

— நமது நிருபர்

# ஓர் அசத்து அசத்தி விட்டீர்கள்!

• முறையான பயிற்சியும், விடா முயற்சியும், தன்னம்பிக்கையும் கொண்ட ஏஞ்சலா போன்ற விளையாட்டு வீராங்கனைகளால் ஏஷியாட் தங்கத்தை எட்டிப்பிடிப்பது இயலாத காரியமில்லை, என்பதை உள்ளோட்டமாய் உணர்த்தியது கவர் ஸ்டோரி.

நெல்லிக்குப்பம், ரா. ஜோதிராமன்.

• சிலர் தங்களிடமுள்ள தனித்திறமையின் மூலம் முன்னேறுகிறார்கள். மற்றவர்கள் ஊக்குவிப்பதின் மூலம்தான் மேலும் மேலும் முன்னேறுகிறார்கள். ஏஞ்சலா வின்னியின் வண்ணப் படத்தை அட்டையில் வெளியிட்டுக் கவர் ஸ்டோரியே எழுதி அவருக்கு நல்ல டானிக் வழங்கியிருக்கிறீர்கள். மனமாரப் பாராட்டுகிறேன்.

மதுரை — 1, வி. விஜயராகவன்.

• உடல் துவண்டு — கழுத்திற்குக் கீழே உணர்ச்சியற்றுத் தொய்ந்து போன நிலையிலும், மனம் துவளாமல் ஒரு புதிய சரித்திரம் படைத்து வரும் இளைஞர் ராமகிருஷ்ணன் என் நெஞ்சில் அழுத்தமான பாதிப்பை ஏற்படுத்திவிட்டார். இவரின் தூய தொண்டுள்ளம் மேன் மேலும் பலம் பெற எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

மதுரை — 9, பிரபாகர் ப்ரியன்.

• அறிஞர்கள் + அரசியல்வாதிகள் = அற்புதங்கள் — தலையங்கம் படித்தேன். அறிஞர்களும் அரசியல் வாதிகளும் ஒத்துழைத்தால் தமிழகத்தில் அற்புதங்கள் நிகழ்த்திக்காட்டலாம் என்பது நூற்றுக்கு நூறு உண்மையான வாசகம். ஆனால் அற்புதங்களைக் காண்பதற்குத் தமிழ்நாடு கொடுத்து வைத்திருக்க வேண்டும்!

கடலூர் — 2, ஆர். வேணுமணி.

• அரசியல் அவலங்களைச் சொல்லி அழுது கொண்டிருக்காமல், நம் அரசுக்குப் பல்வேறு தொலை நோக்குத் திட்டங்களுக்கான வழிமுறைகளையும், ஆலோசனைகளையும் தலையங்கத்தில் சொல்லியிருந்த விதம் மிகவும் பாராட்டத்தக்கது.

பாபநாசம், ப. மணிமுடி.

• பாக்யராஜ் பற்றிய கேள்விக்குத் தங்களின் பதில் அருமை. அவர் திரைப்படத்துறையிலும், பத்திரிகைத் துறையிலும் தமது திறமைகளை முழுமையாக வெளிப்படுத்திக் கொண்டு, அரசியல் பிரதேசத்திலிருந்து முழுமையாக வெளிநடப்புச் செய்தால் தமிழகமே மகிழ்ச்சியால் தத்தளிக்கும்!

நல்லூர், அமைந்தகரை
வே. வேல் அருள்.

• கமலா நடராஜனின் "தண்டனை" சிறுகதை மிகவும் அருமை. நீண்ட நாட்களுக்குப் பிறகு ஒரு நல்ல கதையுள்ள திரைப் படத்தைப் பார்த்த உணர்வு!

வலங்கைமான், ஸ்ரீ. சந்தானம்.

• கணவன் — மனைவி உறவு என்றால் எப்படி இருக்க வேண்டும் என்பதை மிக அழகாகவும், தெளிவாகவும் 'ரகசியம்' சிறுகதையில் விளக்கிய ராஜா பாலசந்தர் அவர்களுக்கு எனது மனமார்ந்த பாராட்டுகள்.

ஒரூர், வி.ஆர். ராஜேஷ்.

• இவ்வாரக் கதைகள் அனைத்துமே நல் முத்துக்களாய்ப் பிரகாசித்தன! கதா பாத்திரங்களுடனேயே ஒன்றிப் போகும் அளவுக்கு, வெகு இயல்புடன் யதார்த்த சூழ்நிலைகளை வைத்துப் படைக்கப்பட்டிருந்த விதம் மனத்தை விட்டு அகலாதது.

திருச்சி — 16, ஜானகி மைந்தன்.

• ஸ்கூட்டர், கார், அச்ந்தால் "ப்ளேன்" என்று கூட வரதட்சிணையாய் வாங்கக் காத்துக் கொண்டிருக்கும் இக்காலத்தையும், காந்தி மகான் போற்றிய கைராட்டினத்தையும் கதர்த் துணிகளையும் வரதட்சிணையாய்ப் பெற்ற லால்பகதூர் சாஸ்திரியையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, இக்கால இளைஞர்களைக் கண்டு வெட்கமாய் இருக்கிறது. காஞ்சி முனிவர் கூறியிருப்பது போல் "கொடுத்தாலும் வேண்டாம் என்ற மனோபாவம் எல்லோரிடையேயும் வளர வேண்டும்."

சென்னை — 33,
வி.எஸ். வாசன்.

• 'பொறுப் பற்ற டாக்டர்' படக்கதை அருமை. கதை சிறிதானாலும் கருத்துப் பெரிது. வெல்டன்!

ஈரோடு — 11, ஏ. குருமூர்த்தி.

• தமயந்தி எழுதிய "பொய் முடிச்சுகள்" நடைமுறை வாழ்க்கையின் யதார்த்தத்தைப் பிரதிபலித்த சிறுகதை. திருமணம் என்னும் பந்தம் ஏற்பட எப்படியெல்லாம் பொய் முடிச்சுப் போடப் பார்க்கிறார்கள் என்பதை மிக மிக இயல்பாக எழுதிய தமயந்திக்கு என் பாராட்டுக்கள்.

திருப்பரங்குன்றம்,
எஸ். மந்திரமூர்த்தி.

• 'ஒட்டைக் கப்பலுக்கு ஒன்பது மாலுமிகள்' என்று தமிழக ஜனதா தளம் பற்றி எழுதப்பட்ட கட்டுரை சிரிப்பை வரவழைத்தாலும், இன்றைய நிலையில் குழம்பியிருக்கும் எதிர்க் கட்சிக்கு ஒரு படிப்பினை என்பதிலும் சந்தேகமில்லை.

சென்னை — 90, ராமு.

• இவ்வாரக் கார்ட்டூனில் "ஜெயலலிதா பற்றிய கணக்கில்" ஓர் அசத்து அசத்திவிட்டீரே. கண்மூடித்தனமாகச் சட்டசபைக்குப் போகாமல் இருக்கும் ஜெயலலிதா இந்தக் கார்ட்டூனை பார்த்து விட்டாவது இனி ஒழுங்காகச் செல்வாரா?

தக்கோலம், அ. முஸ்தபா.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: டி. ராஜேந்திரன்.

முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 315 6 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

# இரண்டில் ஒன்றை தேர்ந்தெடுங்கள் இன்றே!




இதோ எங்கள் இரண்டு வித CAT 1000 மாடல்கள். இவை கம்ப்யூட்டர் எய்டெட் டெக்னலஜியின் அருமையான படைப்புகள். டிவியை ஸ்விட்ச்-ஆன் செய்ததும் அவற்றின் சிறப்புகளைக் கண்டுகளிக்கலாம். பிரகாசமான, துல்லியமான, உயிரோவியமான வண்ணங்கள் தோன்றும். இவை அனைத்தும் கம்ப்யூட்டர் எய்டெட் டிசைனுலும் (CAD), உலகத்தரம் வாய்ந்த தயாரிப்பாளர்களின் LOT, SMPS, MOSFET, எலெக்ட்ரானிக் ட்யூனர், கலர் ஐஸி-க்கள் போன்ற இம்மியளவும் குறைகளற்ற உறுப்புகள் கொண்ட கம்ப்யூட்டர் எய்டெட் மான்யுஃபாக்சரினுலும் (CAM) மட்டுமே சாத்தியமாகி இருக்கின்றன.

**◄CAT 1000 SE**

**பளபளப்பாக பிரமிப்பூட்டும் பேரழகு கொண்ட கலர் டிவி**




**CAT 1000 DX ►**

**(ரிமோட் மாடல்)**

**டிஜிட்டல் ஸிந்தஸைஸர் ட்யூனிங் மற்றும் 3 9 புரோகிராம் மெமரி கொண்டது.**

CAT 1000 DX டிவியின் ரிமோட் ஹாண்ட் செட்டில் (தொலைக் கட்டுப்பாட்டில்) மைக்ரோப்ராஸஸர் கண்ட்ரோல் அமைக்கப்பட்டுள்ளது. இதனால் புரோகிராம், பாண்டு மற்றும் சானல் செலக்ஷன், தவிர வால்யூம், கலர் கான்ட்ராஸ்ட், ப்ரைட்னஸ், மியூட், ஸ்டாண்ட்-பை போன்ற இயக்கங்களை மிக எளிதில் செய்ய முடிகிறது.






படங்களின் அன்பாதரவு : கீதாஞ்சலி அய்யர் மற்றும் சுஜாதா பில்ம்ஸ் லிமிடெட் ('அக்னி நட்சத்திரம்' படக்காட்சி)

**கலர் சாலிடேர்**

Insight-DE-820

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# இலவசம்!

இலவசம்.
இந்த 400 கிராம்
பேக்குடன்
ஒரு
இன்டர்நேஷனல்
லக்ஸ் சோப்









**பாண்ட்ஸ்**
ட்ரீம்ஃபிளவர் டால்க்

முந்துங்கள்.
சரக்கு உள்ள வரையே இச்சலுகை.

இந்த சலுகையில்லாமலும்
ட்ரீம்ஃபிளவர் டால்க்
கிடைக்கும்.

HTA 7277